# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

சிலம்பு ௨௬ | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௮௩, மாசி மார்ச் 1952 | பரல் ௭

## பத்துப்பாட்டு மாநாடு

ஈராயிரம் ஆண்டுகட்குமுன், நந் தமிழகத்தில் வாழ்ந்து வந்த நம் முன்னோர் எண்ணியிருந்த சிறந்த எண்ணங்களும், கொண்டிருந்த உயர்ந்த கொள்கைகளும், தமிழ்க் கலைஞர்கள் வாயிலாக கலையுருவில் அழியாவாழ்வு பெற்றுள்ளன. சங்க காலத் தமிழ் இலக்கியங்கள் மேற்கணக்கு கீழ்க்கணக்கு என்னும் இரு பாகுபாட்டுள் அமையும். அவற்றுள், பத்துப் பாட்டும் எட்டுத் தொகையும் மேற்கணக்கைச் சார்ந்தவை. பத்துப் பாட்டு இன்ன என்பது ;

> முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை
> பெருகு வளமதுரைக் காஞ்சி—மருவினிய
> கோலநெடு நல்வாடை கோல்குறிஞ்சி பட்டினப்
> பாலை கடாத்தொடும் பத்து.

என்னும் இவ்வெண்பாவால் இனிது விளங்கும்.

இவ்வரிய தமிழ்ச் செல்வங்கள் நம் செல்வமென உரிமையொடு உணரவும், நம் வாழ்வு செழிக்கும்படி சேர இருந்து தமிழ்ச்சுவை நுகரவும், இத்தகைய மாநாடுகள் யாண்டும் வேண்டப்பெறும். மாநாட்டின் இன்றியமையாமையையும், அம் மாநாட்டில் நிகழ்த்தப்பெறும் அரும்பொருளை யாவரும் பெற்று இன்புறச் செய்தலால் ஆகும் நன்மையையும் நன்குணர்ந்த திருநெல்வேலி, தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் தங்கள் அறநிலையங்களில் ஒன்றாகிய 'தென்னிந்திய தமிழ்ச் சங்கச்' சார்பில் இதற்குமுன் கலித்தொகை, குறுந்தொகை, அகநானூறு, நற்றிணை, புறநானூறு ஆகிய மாநாடுகளைச் சென்னையில் கூட்டி நடத்தி மாநாட்டுச் சொற்பொழிவுகளையெல்லாம், நூல் வடிவிலும் வெளியிட்டுத் தொண்டாற்றி உள்ளார்கள்.

ஏற்பாடுகள் :

நிகழும் 1952 பிப்ரவரி 9, 10 (தை 27-28) சனி, ஞாயிறு ஆகிய இரண்டு நாட்களிலும், பத்துப்பாட்டு மாநாட்டைத் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ளவர்கள் கண்டு கேட்டு மகிழும்வண்ணம் நடத்தியுள்ளார்கள். இம் மாநாடு திருநெல்வேலிக் கூடல் தருமபுர ஆதீன மடாலயத்தில், ஆண்டுதோறும் தமிழ்த்திருநாளை நடத்திச் சிறப்புறும் 'நெல்லை அருணகிரி இசைக் கழகத்தார்' அமைத்துள்ள அழகிய தமிழ்த் திருநாட் பந்தரில் வெகு சிறப்புடன் நடைபெற்றது. மாநாட்டின் தலைவராக வந்திருந்த சென்னை பச்சையப்பன் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர், டாக்டர். திரு. மு. வரதராசனார் எம். ஏ., எம். ஓ. எல்., பி. எச்டி. அவர்களைத் திருநெல்வேலி ம. தி. தா. இந்துக் கல்லூரியினின்றும் பூணி இன்றியும் பொறியின் இயங்கிடும் மான் அமைவையமாகிய நிலஊர்தியில் மேள தாளச் சிறப்புடன் ஊர்வலமாக மாநாட்டிற்கு அழைத்து வந்தார்கள்.

தலைவர் பேருரை :

மாநாட்டில் மாவட்டத்தின் இருபெருஞ் செல்வர்களும், பெண்டிர்களும், மாணவர்களும் ஏராளமாகத் திரண்டு கூடியிருந்தனர். வாழையும் பச்சைக்கொடிகளும் தழைகளும் இளநீர்க்குலைகளும் பன்னிறத்தாட் பூக்களும், கொடிகளும், நீதித்தாள் அட்டைகளும், பொருந்தி விளக்கமுற்ற பந்தலில் தென்புறம் அமைக்கப்பெற்றிருந்த அழகிய அரங்கில் தலைவர் அவர்கள், செயலாளர் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்களால் மாலைபுனைந்து வரவேற்கப்பட்டார்கள். முதற்கண் கடவுள் வணக்கமும், தமிழ்த்தாய் வணக்கமும் இன்னிசைவாணரால் இசைக்கருவிகளுடன் பாடப்பெற்றன. பின் செயலாளர் அவர்கள், மாநாட்டைத் திறந்து சிறப்பிக்க முன்வந்துள்ள 'சித்தாந்த சைவப் புலவர்', இராவ்சாகிபு, டாக்டர் தி. இரா. அண்ணாமலைப் பிள்ளை எல். சி. பி. எஸ்., எல். எம். எஸ். ஏ. (இலண்டன்) அவர்களை, மாநாட்டைத் திறந்துவைக்கும்படி மாலையிட்டு வேண்டினார்கள். திறப்பாளர் அவர்கள் தம் திறப்புரையில் பத்துப் பாட்டில் கண்டுள்ள செடி, கொடி, பூ மருந்துவகை முதலியவற்றின் சிறப்புக்களை விதந்தெடுத்துப் பேசினார்கள். பின்னர், தலைமை தாங்கும் டாக்டர். வரதராசனார் அவர்கள் பத்துப்பாட்டின் பெருமை, ஆற்றுப்படையின் அருமை, பண்டைத்தமிழ் நாகரிகம், அகப்பொருட் சிறப்பு முதலியவற்றைத் தம் தலைமையுரைத் தொகுப்பினின்றும் வகுத்தெடுத்து இனிது வழங்கினார்கள்.

சொற்பொழிவுகள் :

பின், பத்துப்பாட்டின் முதற் பாட்டாகிய 'திருமுருகாற்றுப்படை' என்னும் பொருள்பற்றிய விரிவுரை ஆற்றவேண்டியவராகிய மதுரை ஆசிரியர், 'சித்தாந்த கலாநிதி' திரு. ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள் வர இயலாத காரணத்தால், அப்பணியைக் கழகப்புலவர் 'பெருநாவலர்', 'பேராசிரியர்', திரு. பு. சி. புன்னைவனநாத முதலியார் அவர்கள் ஆற்றுவாராயினர். அவர்கள் கலாநிதி அவர்கள் அமைத்த ஆற்றுப்படைக் கட்டுரை, 18 உறுப்புக்களுடன் அமைந்துள்ளது என்றும், ஆற்றுப்படை விளக்கம், முருகாற்றுப்படையின் சிறப்பு, படைவீட்டின் பெருமை, வழிபாட்டின் அருமை இவைகள் இன்னின்ன முறையில் விரிக்கப்பெற்றுள்ளன என்றும் எடுத்து மொழிந்தார்கள். பின்னர், பெரியகுளம் நாட்டாண்மை உயர் நிலைப்பள்ளி வித்துவான். திரு. வி. சிவக்கொழுந்து அவர்கள் 'பொருநராற்றுப் படை'பற்றி ஊடே ஊடே இனிய இசையுடன் பேசியது இனிய விருந்துண்பானொருவனுக்கு இடை இடையே இனிய தேன்கூழும் இன்கனிகளும் மகிழ்விப்பனபோல் மகிழ்வித்தது. அதன்பின், பாளையங்கோட்டை, தூய யோவான் கல்லூரி வித்துவான், திரு. கா. மாயாண்டி பாரதியவர்கள் சிறுபாணாற்றுப் படை பற்றிப் பேசினார்கள். சொற்பொழிவாற்றுவோர் ஒவ்வொருவர் பேச்சும் ஒன்றரைநாழிகையே நடைபெற்றதென்பது குறிப்பிடத்தக்கது. இதற்கிடையில் நெல்லை நகர் மன்றப்பெண்கள் உயர்நிலைப் பள்ளி மாணவியர் 'ஆடல் பாடல்' நிகழ்ச்சிகளும், அதில் இரு மாணவிகள் பரத நாட்டியம் ஆடியதும், ஓரங்கச் சிறுநாடகம் போன்றிருந்து மக்களுக்கு மனமகிழ்ச்சியை உண்டுபண்ணின.

இறுதியில், தலைவரவர்கள் அணிந்துரைக்குப்பின் அன்றைய நிகழ்ச்சிகள் செயலாளர் நன்றியறிதலுடன் இரவு 9-30 மணிக்கு முடிவடைந்தன.

10—2—52 ஞாயிற்றுக்கிழமை, காலை 9-மணிக்குப் பத்துப்பாட்டு மாநாடு தொடர்ந்து நடைபெறுவதாயிற்று.

தலைவரவர்கள் தந்துரை நிகழ்த்தியபின், அம்பாசமுத்திரம் தீர்த்தபதி உயர்நிலைப்பள்ளி வித்துவான் திரு. மு. ரா. கந்தசாமிக் கவிராயர் அவர்கள் 'பெரும்பாணாற்றுப் படை'பற்றிச் சொற்பொழிவாற்றினார்கள். அதன்பின் பாளையங்கோட்டைத் தூய சேவியர் கல்லூரித் தமிழ் ஆசிரியர் திரு. ச. குருசந்தோணி எம். ஏ. அவர்கள் முல்லைப்பாட்டைப்பற்றிப் பொதுப்பட ஆராய்ந்து பேசினார்கள். இதன்பின் ஒரு இனிமையான சுவைத்

தற்குரிய நிகழ்ச்சி நடைபெற்றது. அதுதான் திருநெல்வேலி மந்திரமூர்த்தி உயர்நிலைப்பள்ளி மாணவர் திரு. சீனிவாசன் என்பார் பாடிய 'வில்லுப் பாட்டாகும்.' பத்துப் பாட்டைப் பற்றி இசையோடு நாட்டுப் பாட்டு முறையில் வில்லுப்பாட்டு அமைந்திருந்தது. அவருடைய அபிநயமும் இசையின் இனிமையும் குழுமியிருந்த ஆடவரையும் மகளிரையும் மிக மகிழ்வித்தன. "நமஸ்காரம்" என்னும் சொல் எவ்வளவு காரசாரமாக விருக்கிறது; அதனினும் "வணக்கம்" என்பது எவ்வளவு இனிமையாக இருக்கிறது என்று பகர்ந்ததும், "மலைபடு கடாம்" என்று ஒரு சட்டியை உடைத்தாற்போன்ற அவரது திறமையும், அவையோரின் பலத்த கைதட்டலுக்கு இலக்காயின. அவருக்குச் சிந்து பூந்துறைச் செல்வர் திரு. சொர்ணம் பிள்ளை அவர்கள் புறநானூற்றையும், தென்னிந்திய தமிழ்ச்சங்கச் செயலாளர் அம்பிகாபதிகோவையுடன் பதினொரு வெண் பொற்காசுகளையும் உவந்தளித்துச் சிறப்பித்தார்கள். அன்னாரது இனிய வில்லுப்பாட்டுக்குப்பின், பாளையங்கோட்டைத் தூய யோவான் கல்லூரித் தமிழ் ஆசிரியர் திரு. ஆ. செபரத்தினம் அவர்கள் எம். ஏ. 'மதுரைக் காஞ்சி' என்பதுபற்றிச் சொற்பொழிவாற்றினார்கள். அதன்பின் தலைவர் அவர்கள் அணிந்துரை கூறியதும், காலை நிகழ்ச்சிகள் முடிவுற்றன.

பகல் ஒருமணிக்கு அறுசுவை விருந்து நடைபெற்றது. விருந்து மிகவும் சுவையுள்ளதாக அமைந்திருந்தது. விருந்தோடு விருந்தில் எவ்வெப்பொருள்கள் இடப்பட்டன என்பதைத் தெரிவிக்கும் செவிவிருந்தாகிய செய்யுள் ஒன்றும் படிக்கப்பட்டது.

பிற்பகல் 3-மணிக்கு மாநாட்டுத் தலைவர், திறப்பாளர், சொற்பொழிவாளர்கள் முதலியோர்கள் கொண்டுள்ள புகைப் படம் பிடிக்கப்பட்டது.

மாநாட்டின் மாலை நிகழ்ச்சி 4-30-மணிக்குத் தொடங்கப் பெற்றது. முதலில் தலைவரவர்கள் தந்துரை கூறியபின், நெல்லை. திரு. மந்திரமூர்த்தி உயர்நிலைப்பள்ளி வித்துவான் திரு. அ. க. நவநீத கிருஷ்ணன் அவர்கள் 'நெடுநல்வாடை' என்னும் பொருள்பற்றிப் பேசுகையில் தலைவியின் நிலை, வாடையின் கொடுமை முதலியவற்றைச் சிறப்பித்துப் பேசினார்கள். பின்னர் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த வித்துவான் திரு. க. வெள்ளை வாரணனார் அவர்கள் 'குறிஞ்சிப் பாட்டு' என்பதுபற்றி அழகாகப் பேசினார்கள். அதன்பின், 'பட்டினப் பாலை' என்பதுபற்றிப் பேசவேண்டிய தூய சேவியர் கல்லூரித்

தமிழாசிரியர் திரு. ஆ. அருளப்பன் B. A. அவர்கள் வர இய லாதபடியால், குலசை. வீரசுப்பிரமணிய பிள்ளை அவர்கள் அப் பொருள்பற்றிப் பேசினார்கள். பின், பாளையங்கோட்டை சாரா தக்கர் கல்லூரி மாணவியர் மூவர் "பெண்கள் அன்றும் இன் றும்" என்பதுபற்றி உரையாடினார்கள். உரையாடியவர்களுக் குத் தனித்தனியே திருக்குறள் தெளிவுரை பரிசாக அளிக்கப் பட்டது.

நெல்லை ம. தி. தா. இந்துக் கல்லூரித் துணைத்தலைவர் திரு. வ. பொன்னுசாமிப் பிள்ளை எம். ஏ. அவர்கள் பத்துப் பாட்டுச் சொற்பொழிவுகள் என்னும் நூலைப் பாராட்டி வெளியிட்டனர்.

இறுதியில் விருதுநகர் செந்திற்குமார நாடார் கல்லூரி வித்துவான். திரு. ந. சேதுரகுநாதன் அவர்கள் 'மலைபடு கடாம்' என்னும் பத்துப் பாட்டின் இறுதிப் பாட்டைப்பற்றிச் சொற் பொழிவாற்றி முடித்தார்கள்.

அதன்பின், தலைவரவர்கள் நிறைவுரை நிகழ்த்தியதும் திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக ஆணையாளர் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் நன்றி கூறினார்கள்.

பத்துப் பாட்டு மாநாட்டைச் சிறப்புடன் நடத்துவதற்குப் பெருந்துணையாய் இருந்த அருணகிரி இசைக்கழக அமைச்சர், திரு. இராம கனகசபாபதி பிள்ளை அவர்களுக்குத் திருக்குறள் பரிமேலழகர் உரைப்புத்தகம் ரெக்ஸைன் கட்டடம் பரிசளித் தும், மேற்படி கழக விரிவுரைப் பொறுப்பாளர் திரு. நவநீத கிருஷ்ண பிள்ளை பத்துப்பாட்டைப்பற்றிய வில்லுப்பாட்டுப் பாடி சிறப்புவித்தமைக்கு, அறிகுறியாக 'பதிற்றுப்பத்து' என்னும் நூலைப்பரிசளித்துப் பாராட்டினார்கள். கடவுள் வாழ்த் துடன் மாநாடு இனிது நிறைவேறியது.

## வாழ்த்து

பாட்டின் பழைமையுநற் பண்பும் பகர்பத்துப்
பாட்டின்மா நாடுநெல்லை பன்கரந்தை—கூட்டுமிரு
பானேழெட் டில்வரத ராசனற் பண்டிதனும்
தானேற் றனன்தலைமை தான்.

கற்பனையார் பாட்டுமா நாடும் கவினிறைசீர்க்
கற்பனையில் நன்கு கதித்தெழுந்த—அற்புடைய
சுப்பைய வேட்குத் துணையாம் புலவரேலாம்
இப்புவியில் வாழிநலம் எய்ந்து. —இதழாசிரியர்.

# பத்துப்பாட்டும் கல்வெட்டுக்களும்

[திரு. T. V. சதாசிவபண்டாரத்தார், அண்ணமலைநகர்]

பத்துப்பாட்டு என்பது சங்கத்துச்சான்றோர் எண்மரால் இயற்றப்பட்டுக் கடைச்சங்கத்திறுதிக்காலத்தில் தொகுக்கப் பெற்ற பத்துப்பாடல்களைத் தன்னகத்துக்கொண்ட ஒரு நூலாகும். இது பண்டைத் தமிழ்மக்களுடைய வரலாறுகளையும் வழக்க ஒழுக்கங்களையும் நம்மனோர்க்கு நன்குணர்த்தும் பெருமை உடையது. காலஞ்சென்ற பேராசிரியர் பெ. சுந்தரம்பிள்ளை அவர்கள் தம் மனோன்மணீயம் என்னும் நாடகத்தில்,

'பத்துப்பாட் டாதிமனம் பற்றினர் பற்றுவரோ
எத்துணையும் பொருட்கிசையும் இலக்கணமில் கற்பனையே'

என்று இவ்வரியநூலைப் பாராட்டியிருப்பது குறிப்பிடத்தக்கது. இதில் ஆற்றுப்படைகளாக வுள்ளவை, திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, மலைபடுகடாம் என்பன. எஞ்சியவை முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப் பாலை ஆகிய ஐந்தும் ஆகும். இப்பாடல்களைத் தன்பாற்கொண்ட பத்துப்பாட்டு கி. பி. இரண்டாம் நூற்றாண்டிலாதல் அதற்கு முன்னராதல் தோன்றியிருத்தல்வேண்டும் என்பது அறிஞர்களது கொள்கை. தமிழ்நாட்டில் கோயில் சுவர்களில் பொறிக்கப்பெற்றுள்ள தமிழ்க் கல்வெட்டுக்கள் கி. பி. ஏழாம் நூற்றாண்டுமுதல்தான் காணப்படுகின்றன. ஆகவே, தமிழ்க் கல்வெட்டுக்கள் எல்லாம் பத்துப்பாட்டிற்குக் காலத்தால் மிகப் பிற்பட்டனவேயாம். எனினும், பத்துப்பாட்டும் கல்வெட்டுக்களும் தமிழ் மக்களுடைய வரலாறுகளை யுணர்த்துவதில் தம்முள் ஒற்றுமையுடையனவேயாம்.

இனி, கல்வெட்டுக்களால் விளக்கமுற்று உறுதியெய்தும் பத்துப்பாட்டுச் செய்திகளுள் சிலவற்றைக்காண்பாம்.

1. கடைச்சங்கப் புலவருள் ஒருவரும் குறிஞ்சிப்பாட்டின் ஆசிரியரும் ஆகிய கபிலர், திருக்கோவலூரில் பெண்ணையாற்றங் கரையில் தீப்பாய்ந்து உயிர்நீத்தனர் என்றும், அப்புலவர்பெருமானை நினைவுகூர்தற்பொருட்டு அவ்விடத்தில் ஒரு நடுகல் நிறுவப்பெற்றது என்றும், அக்கல், 'கபிலக்கல்' என்று அந்நாளில் வழங்கப்பட்டது என்றும் திருக்கோவலூர் வீரட்டானேசுவரர் கோயிலில் முதல் இராசராசசோழன் ஆட்சியில் கி. பி. 1012-ல் வரையப்பெற்ற கல்வெட்டொன்று கூறுகின்றது. அகவற்பாவில் அமைந்துள்ள அக் கல்வெட்டுப்பகுதி,

'வன்கரை பொருது வருபுனற் பெண்ணைத்
தென்கரையுள்ளது தீர்த்தத் துறையது
மொய்வைத் தியலு முத்தமிழ் நான்மைத்
தெய்வக் கவிதைச் செஞ்சொற் கபிலன்

மூரிவண் டடக்கைப் பாரிதன் னடைக்கலப்
பெண்ணை மலையற் குதவிப் பெண்ணை
அலைபுன லழுவத் தந்தரிட் சஞ்செல
மினல்புகும் விசும்பின் வீடுபே றெண்ணிக்
கனல்புகுங் கபிலக் கல்லது புனல்வளர்
பேரெட் டான வீரட் டானம்
அனைத்தினு மநாதி யாயது' (S. I. I. Vol. VII, No. 863.)

என்பதாம்.

**2.** கி. பி. 1216 முதல் 1238 முடிய மதுரைமாநகரில் வீற்றிருந்து பாண்டிநாட்டை ஆட்சிபுரிந்த முதல் மாறவர்மன் சுந்தரபாண்டியன் கல்வெட்டொன்று, கடியலூர் உருத்திரங் கண்ணனாரையும் அப் புலவர்பிரான் சோழன் கரிகாற்பெரு வளத்தான்மீது பாடிய பட்டினப்பாலையையும் குறிப்பிடுவது அறியத்தக்கதொன்றாம். திருவெள்ளறையில் கட்டளைக்கலித் துறையாகவுள்ள அக் கல்வெட்டு,

'வெறியார் தளவத் தொடைச்செய மாறன் வெகுண்டதொன்றும்
அறியாத செம்பியன் காவிரி நாட்டி லரமியத்துப்
பறியாத தூணில்லை கண்ணன்செய் பட்டினப் பாலைக்கன்று
நெறியால் விடுந்தூண் பதினாறு மேயங்கு நின்றனவே'

(செந்தமிழ்-தொ. 41, பக். 215.)

என்பது. மாறவர்மன் சுந்தரபாண்டியன் கி. பி. 1219-ல் சோழ நாட்டின்மேல் படையெடுத்துத் தஞ்சையும் உறந்தையும் செந் தழல் கொளுத்தி, மாடமாளிகைகளையும் ஆடரங்குகளையும் மணி மண்டபங்களையும் இடித்து அழித்தனன் என்று அவன் மெய்க் கீர்த்தி கூறுகின்றது. அப்படையெழுச்சியில் பாண்டிவேந்தனால் சோழநாட்டில் இடிக்கப்படாமல் விடப்பெற்றது, முற்காலத்தில் பட்டினப்பாலை பாடிய கடியலூர் உருத்திரங்கண்ணனார்க்குச் சோழன் கரிகாற்பெருவளத்தான் பரிசிலாக வழங்கியிருந்த பதினாறுகால் மண்டபம் ஒன்றுதான் என்று மேலே குறிப்பிட்ட சுந்தரபாண்டியன் கல்வெட்டு உணர்த்துவது காண்க.

**3.** திருவண்ணாமலையில் கி. பி. பதின்மூன்றாம் நூற்றாண் டில் வரையப்பெற்ற கல்வெட்டொன்று, தொண்டைமண்டலத் தில் பல்குன்றக்கோட்டத்திலுள்ள செங்கைமாவிலிருந்து அர சாண்ட வேள்நன்னன் என்பவனையும் அவன்மீது இரணியமுட் டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் பாடிய மலைபடு கடாம் என்ற நூலையும் குறிப்பிடுதல் அறியற்பாலதாகும். அக் கல்வெட்டுப்பகுதி,

'நல்லிசைக் கடாம்புனை நன்னன் வெற்பில்
வெல்புக ழனைத்தும் மேம்படத் தங்கோன்
வாகையுங் குரங்கும் விசையமுந் தீட்டிய
அடல்புனை நெடுவேல் ஆட்கொண்ட தேவன்'

என்பதாம். (S. I. I. Vol. No. 69.)

இதில், 'நல்லிசைக் கடாம்புனை நன்னன்' என்ற தொடர் 'இனிய ஓசையமைந்த மலைபடுகடாம் என்னும் நூல்கொண்டு புகழ் எய்திய நன்னன்' என்று பொருள்படுதல் அறிக. அன்றியும், இதில் குறிக்கப்பெற்ற நன்னன் வெற்பு என்பது மலைபடுகடாத்தில் 'நீரகம்பனிக்கும் அஞ்சுவரு கடுந்திறற்—பேரிசை நவிரம்' எனவும், 'வாய்வளம்பழுநிக்—கழைவளர்நவிரம்' எனவும் சிறப்பித்துக் கூறப்பெற்றுள்ள நவிரமலையாதல்வேண்டும். இந்நவிரமலை இக்காலத்தில் திருவண்ணுமலைக்கு வடமேற்கே திரிசூலகிரி, பர்வதமலை என்ற பெயர்களுடன் உளது. மலைபடுகடாத்தில் நன்னன் 'குன்றுசூழ் இருக்கை நாடு கிழவோன்' என்று பெருங்கௌசிகனுர் என்ற புலவர்பெருமானுல் பாராட்டப்பெற்றுள்ளனன். அக் குன்றுசூழ் இருக்கைநாடு என்பது முற்காலத்தில் தொண்டைமண்டலத்திலிருந்த இருபத்துநான்கு கோட்டங்களுள் ஒன்ருகிய பல்குன்றக்கோட்டத்தையே குறிக்கும் என்பது பல கல்வெட்டுக்களால் அறியப்படுகின்றது.

மலைபடுகடாத்தின் ஆசிரியராகிய பெருங்கௌசிகனுரது பெருங்குன்றூர் இரணியமுட்ட நாட்டிலுள்ளதோர் ஊராகும். இரணியமுட்டநாடு என்பது பாண்டிமண்டலத்திலிருந்த உள்நாடுகளுள் ஒன்று என்பதும் அந்நாடு மதுரைமாநகர்க்கு வடகிழக்கேயுள்ள ஆனைமலை, அழகர்கோயில் (திருமாலிருஞ்சோலை) முதலான ஊர்களைத் தன்னகத்துக்கொண்ட ஒரு பெருநிலப் பரப்பு என்பதும் கல்வெட்டுக்களால் அறியக்கிடக்கின்றன. (S. I. I., Vol. III, No. 106.) எனவே, பெருங்கௌசிகனுருடைய பெருங்குன்றூரும் அப்பதியில்தான் இருத்தல்வேண்டும் என்பது திண்ணம். ஆகவே, அக் கவிஞர்கோமான் பாண்டி நாட்டுப் புலவர் என்பது உணரற்பாலதாம்.

4. சிறுபாணுற்றுப்படையின் தலைவனுகிய நல்லியக்கோடனுடைய ஒய்மாநாடு என்பது தொண்டைமண்டலத்தில் திண்டிவனம் புகைவண்டி நிலையத்திலிருந்து கிழக்கேயுள்ள கடற்கரை வரையில் பரவியிருந்த ஒரு பெரும் நிலப்பரப்பாகும். திண்டிவனம், கிடங்கில், திருஅரைசிலி முதலான ஊர்கள் ஒய்மாநாட்டில் இருந்தவை என்பதும் அந்நாடு சோழர்களது ஆட்சிக் காலங்களில் விசையராசேந்திரவளநாடு என்று வழங்கப்பெற்று வந்தது என்பதும் பல கல்வெட்டுக்களால் அறியப்படுகின்றன.

இதுகாறும் பத்துப்பாட்டுச் செய்திகளுள் சில, கல்வெட்டுக்களின் துணைகொண்டு விளக்கப்பெற்றமை உணர்க.

# பத்துப்பாட்டும் நாட்டின் வளனும்

[வித்துவான், திரு. வேத. தாவீது நாடார்]

தமிழகமாய வடவேங்கடந் தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறு நல்லுலகத்து ஐவகை நிலங்களும், அவற்றில் வதிந்த மக்களின் பழக்க வழக்கங்களும், மரபுகளும் கடையெழு வள்ளல்களின் வள்ளன்மை காட்டும் குறிப்புகளும், கரிகாற்பெருவளத்தானின் பெருமிதமும், அவன் காலத்திய புகார்நகரின் நெய்தல் நில மக்கள் வாழ்க்கை நெறியும், வணிகச் சிறப்பும், தமிழ்கத் தொழில் முறைகளும், இல்லற இன்ப நிகழ்ச்சிகளும் ஒருங்கே திரட்டப்பட்டு உள்ளடக்கி, தமிழர் தொன்மை நாகரிகம் தெரிவிக்கும் தமிழக மாந்தர்க்குரிய ஓர் பெட்டகமாய் இலங்குவது. பத்துப்பாட்டானது தமிழகக் கருவூல நூல். நன்மொழியே கூறும், எண்ணும் நக்கீரன் இயற்றிய திருமுருகாற்றுப்படை, தமிழர்கள் ஒன்றே தெய்வம் என்னும் கொள்கையுடைய ரென்பதூஉம், இயற்கையில் இறைவனைக் காணலாம் என்பதூஉம், அழகு, இளமை, மணம், கடவுட்டன்மை பொருந்திய முருகுடையவரே தமிழர் வழிபட்ட இறைப்பொருள் என்பதூஉம் தெரிவியா நின்றது. அது அளித்தற் றொழில் புரியுங்காலைத் திருமால் எனும் பெயருடன் திகழ்கின்றது.

இயற்கையோடுறைந்து இயற்கையைத் துருவி, இயற்கையிற் படிந்து இயற்கையின் வாயிலாய் அரிய பெரிய கருத்துக்களை, தூய தமிழில் தெளிவுற உலகியலினுள்ள உவமங்கள் வாயிலாய் எடுத்துக்காட்டின பெருமை பண்டைத் தமிழ் நல்லிசைப் புலவர்கட்கே உரியதெனக் கூறல் மிகையாகாது. அவர்களது சீரிய ஒழுக்கமும், வாழ்க்கைத்திறனும், பிற மக்கள் மீதுள்ள அருளுடைமையும், உலகியலறிவும், தெய்வக் கோட்பாடும், எல்லோரும் ஓர் குலம் எல்லோரும் ஓர் இனம் என எண்ணும் இயல்பினால் அரசன் இல்லோரை ஒக்கலாக்கி, வேண்டுவன தந்து அவர்கட்குத் தலைவனாக அமையவேண்டுங் கடப்பாடுடையனாய் ஒழுக வேண்டும் எனும் கொள்கையை அகத்தே நிரம்பப்பெற்று அரசர்கட்குச் செவியறிவுறூஉக் கருத்துக்களை வெளியிடுவதும், மக்களை மகிழ்வுள்ளவராக்கச் செய்வது ஈகையே என்பதை மிகைபடக்கூறும் கூற்றுக்களும் இப்பாக்களில் பரக்கக் காணலாம்.

ஒரு கருத்தைத் தமிழிற் கூறின் மிகுதியான தமிழ்ச் சொற்கள் உபயோகிக்க வேண்டியுளது. அதே கருத்தை ஆங்கிலத்தில் மிகக் குறைந்த சொற்களில் எடுத்துக்கூறி தெளி

வாக்கிவிடலாம் என்கின்றனர் ஆங்கிலங் கற்ற தமிழர் பலர். தமிழ் விரியும் எனச் சொல்லித் தமிழ்மொழியை ஒப்புநோக்காது ஆங்கிலஞ் சிறந்தது என முடிவும் கட்டுகின்றனர். அன்னார், அணுவையும் கடுகையும் துளைத் தேழ்கடலைப் புகட்டிக் குறுகத்தறித்த குறளையும், சங்க இலக்கியங்களையும் தெள்ளிதின் உணரின் பண்டைத்தமிழர், எத்துணைக் குறைந்த சொற்களில் நயம்பட விரிவுப்பொருளை அடக்கியுள்ளனர் என்பதைப் போற்றாதிருக்க வியலுமோ? நூலுட் புகுந்து ஒருசிலவற்றை ஆய்வோம்.

**அமைச்சர் இயல்**

செற்றமும் உவகையும் செய்யாது காத்து, சமன்கோல் அன்ன செம்மைத்தாகி, நடுவுநிலைமைக் குணங்களாற் சிறந்த அறங்கூறும் அவையமும், வேள்வி செய்து சுவர்க்கம் ஏறப் போம் அந்தணன் ஆன அறவோன் அரசனை அடக்குவதுபோல அரசனிடம் நன்றும் தீதும் கண்டு, தீதை ஆராய்ந்து, தீதில் ஒழுகாமல் அடக்கி, அரசன் அவன் சுற்றத்தாரிடம் செலுத்த வேண்டும் அன்பையும் பிறவுயிர்களிடத்துக் காட்டவேண்டிய தருமத்தையும் ஒருகாலும் அகலாமல் இடையறாது அவற்றை நினைவூட்டி, பழி ஒரீஇ உயர்ந்து, பரந்த புகழ் நிறைந்த அவிர் தலைப்பாகையை யணிந்து தலைமை யமைந்த காவிதிப்பட்டங்கட்டின அமைச்சர் (மதுரைக். 490—9) என அமைச்சர்க்கு இன்றியமையா விலக்கணமும் தகுதியும் காட்டப்பெற்றுள்ளன. தமிழகத்தில் தற்கால நிலையில் அமைச்சர் தேர்ந்தெடுக்கப்படும் முறை தலைகீழாக மாறியதால், இவ்வமைச்சரில் பெரும்பாலோர் தகுதியற்றவராக மக்களால் தீர்ப்பு அளிக்கப்பட்டுவிட்டனர். அமைச்சர்கள் பண்டை நாளை நோக்கவும் என்கின்றார் இராஜாஜி. அவர், அரசியலில் புகுந்தோர் அனைவரும் குறளையும் சங்கநூற்களையும் கட்டாயம் கற்று அவற்றின்படி ஒழுகவேண்டும் என்கின்றார்.

**நெல்லையின் சிறப்பு**

"சீர்சான்ற நெல்லின் ஊர்கொண்ட உயர் கொற்றவ" என்ற மதுரைக்காஞ்சி (87—88) அடியால் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெல்லையைக்கொண்டான் எனத் தெரிவதால், பாண்டிநாட்டுக்கு அக்காலை நெற்களஞ்சியம் திருநெல்வேலியேயாகும் என்பதூஉம், நெல்லையில் விளைந்த மிகுதியானநெல்லைப் பாண்டிநாட்டுப் பிறநகர் மக்கட்கும் பகிர்ந்தளிக்க நாவாயில் ஏற்றிச்சென்றனர் என்பதூஉம் புலப்படுகின்றன.

**துணி நெய்தல்**

"ஆவியன்ன அவிர்நூல் கலிங்கம்" பெரும்பாண், (469) அடியாலும் "பெண் மகிழ்வுற்ற பிணைநோக்கு மகளிர் மென்னூற் கலிங்கம்" மதுரைக்காஞ்சி, (554—55) அடிகளாலும் மெல்லிய நூலால் நெய்யப்பட்ட ஆடை தரித்தனர் என்பதூஉம், செல்வர் "ஞாயிற்றுச் செக்கரன்ன கலிங்கம் பொன்புனை வாளொடு பொலியக் கட்டி" உள்ளனர் (மதுரைக்காஞ்சி 432—34) என்பதூஉம், மலைபடுகடாம் (561—62) அடிகளால் "எள்ளறு சிறப்பின் இழைமருங்கறியா இழைநூற் கலிங்கம்" அஃதாவது இழை போனவிடம் தெரியாத நுண்ணிய நூலாற் செய்த புடைவை என்பதூஉம், நெடுநல்வாடை (131—33) அடிகளால் "மெல்லிதின் விரிந்த இணை அணைசேக்கை" அஃதாவது நீலப் பட்டாற் செய்த படுக்கை என்பதூஉம் பண்டைத் தமிழகப் பெண்மணிகள் ஆடவர்கள் நெய்தற்றொழிலை எத்துணைச் சிறப்புப் பெறுதற்கு ஆர்வத்தொடு நடாத்திவந்தனர் எனத் தெரிகிறதல்லவா?

**பிற தொழில்கள்**

அறுத்த சங்கை வளையாகக் கடைபவர், அழகிய மணி துளையிடுவார், பொன்னணி பண்ணுந் தட்டார், தங்கத்தை உரைகல்லில் உரைத்துப்பார்த்து மாற்றுக்கூறும் பொன்வணிகர், புடைவை விற்பார், செம்பு நிறை கொள்வார், கச்சுக்களை முடிவார், பூ, புகை ஆய்ந்து விற்பார், கூரிய அறிவுடைச் சித்திரம் எழுதும் பெண்மணிகள், ஆடவர் இவர்களை அந்திக்கடையில் நாடோறும் காணலாம்.

**வாணிகம்**

பலமொழி மக்களாகிய சீனர், சோனகர் வேறு வேறு புலம் பெயர்ந்து புகாரில் வணிகத்தின் பொருட்டுக் குடியேறியிருந்தனர். பட்டினத்திலே நீரில் காலின் வந்த நிமிர்பரிப் புரவியும் கருகறி (மிளகு) மூடையும், வடமலைப் பிறந்த மணியும் பொன்னும், குடமலைப்பிறந்த ஆரமும் அகிலும் தென்கடல்முத்தும், குணகடல் துகிரும் (பவளமும்) கங்கை வாரியும் (பொருளும்) ஈழத்துணவும், கடாரத்துண்டான நுகரும் பொருட்களும் சீனம் முதலிய இடங்களிலிருந்து வந்த கருப்பூரம், பனிநீர், குங்குமம் முதலியனவும் புகாரின் நடுவிலும் கரையிலும் இனிது தங்கிப்போவதும் வருவதுமாயிருந்தன. இவ்வணிக மிகுதியால் மக்கள் செல்வர் ஆயினர். செல்வ வளத்தைக் காட்டுவது இல்லங்களும் தெருவுமேயாதலால் உருத்திரங்கண்ணனார் "வளந்தலை

மயங்கிய நனந்தலை மறுகு" என்கின்றார். பலநாட்டு வணிகரும் "வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப், பிறவும் தமபோற் செயின்" என்ற வள்ளுவர் வாக்குக்கிணங்கி, 'கொள்வதூஉ மிகை கொளாது, கொடுப்பதூஉங் குறை கொடாது' கலந்தினி துறைந்தனர்.

**பண்டைத் தமிழர் இசை**

பெரும்பாண், சிறுபாண், பொருநராறு முதலியவற்றில் பண்டைத் தமிழக இசைக் கருவிகளும் அவற்றை உபயோகித்த திறனும் காணக்கிடக்கின்றன. இசை, பிறரையும் விலங்கு பறவைகளையும் இசைவிக்கும் அல்லது வயப்படுத்தும். பொருந ராற்றுப்படை (70—73) "கைக்கசடிருந்த என் கண்ணகன் தடாரி," தடாரி என்ற இசைக் கருவியையும் பொருநர் வைத் துள்ளனர் என்பதைக் காட்டுகிறது. பாலைப்பண் ஆறலை கள் வரையும் வயப்படுத்தும் என்பதைப் பொருநர் (21—22) 'ஆறலை கள்வர் படைவிட அருளின், மாறுதலை பெயர்க்கும் மருவின் பாலை' என்பதால் வற்புறுத்தப்படுகின்றது. அப்பாலைப் பண்ணை யாழுள் இசைத்தார்கள். சிறுபாண் (35) 'சீறியாழ் இடவயிற் றழீஇ' என்றும், பெரும்பாண் (46) 'இடனுடைப் பேரியாழ் முறையுளிக் கழிப்பி' என்றும் கூறும் அடிகள் பெரும் பாணர்க்கும் சிறுபாணர்க்கும் யாழிலே மாத்திரைதான் வேறு பாடு உண்டெனத் தெரிக்கின்றன.

மலைபடுகடாத்தில் இசைக்கருவிகள் வெளிப்படுகின்றன. அவையாவன: (140—41) "விரல் ஊன்று படுகண் ஆகுளி கடுப்ப" எனவும், (143—44) "சுரஞ்செல் கோடியர் முழவிற் றூங்கி" என வும், (157—58) "வராஅல் துடிக்கண் அன்ன" எனவும் கூறப் பட்டவை ஆகுளி, முழவு, துடி என்பவையாம்.

பத்துப்பாட்டு இதுபோழ்திருக்கும் இசைநூல்களில் முந் தியதாகும். இசைக்குறிப்பு மிகுதியாய்க் காணப்பெறாஉம் சிலம்பு இந்நூற்குப் பிந்தியதேயாம் என்பது அறிஞர் ஒத்துக் கொண்ட முடிபு. இக்காலத் தமிழர், நம் முன்னோர் கொடி யரையும் தீத்தொழிலிலிருந்து விடுவித்து நல்வழிக்குக் கொண ரப் பயன்படுத்திய யாழ், குழல் முதலிய இசைக் கருவிகளையும் பாலைப்பண், முல்லைப்பண், குறிஞ்சிப்பண், மருதப்பண், நெய்தற் பண் முதலிய பண்டைப் பண்களைக் கற்றுப் பிறரை நம் வயப் படுத்தி உலகில் அமைதி நிலவ உதவ முன்வருவாராக.

---

# பத்துப்பாட்டின் பண்பு

[வித்துவான், பாலூர் கண்ணப்ப முதலியார்]

பாட்டு இன்னது என்பதைப் பலபடப் பகர்கின்றன பன் மொழிகள். பல்வகைத் தாதுக்களினால் உயிர்க்கு இடனாக இயற்றப்பட்ட உடம்புபோலப் பல்வகைச் சொற்களாலும் பொருளுக்கு இடனாகத் தங்கள் அறிவினால் கற்றுவல்லோர் அலங்காரம் தோன்றச் செய்வன பாட்டு என்றும், அறிவு உல கிற்கு அழகு செய்வதாய் நிறைந்த பொருட்பொலிவு உடைய தாய்த் துலங்குவது பாட்டு என்றும் செந்தமிழ் நூல்கள் செப்பிக் களிக்கின்றன. மக்கள் மன அறிவினின்றும் வடித்து இறக்கப்பட்ட தூய அமிழ்தம் ஆகும் என்று அறைகின்றனர் ஆங்கில அறிஞர்கள். இங்ஙனம் இயம்பப் பெறும் பாட்டின் இலக்கணம் அனைத்தும் பொருந்தப்பெற்றதே பத்துப்பாட்டு என்னும் பன்னரும் புகழுடைய நூலாகும்.

உச்சிமேற் புலவர் கொள் நச்சினார்க்கினியர் வரைந்த உரை களில் இந்நூற்குரிய உரையும் ஒன்றாதலின், அதனை அச்சிட்டு வழங்கிய ஐயர் அவர்கள் தம் முகவுரையில்

"அமிழ்தினில் சிறந்த தமிழெனும் மடந்தை
கந்தரத் தணிமணிக் கலன்அர சென்ன
**உத்தமர் புகழும்இப் பத்துப் பாட்டு,"**

என்றும், தமிழ்விடுதூது என்னும் தனிப்பெரும் பனுவல்,

"மூத்தோர்கள் பாடி,
அருள்**பத்துப் பாட்டும்,"**

என்றும், உரைச் சிறப்புப்பாயிரம் உரைத்த ஆசிரியர் ஒருவர்

"ஆன்றோர் புகழ்ந்த அறிவினில் தெரிந்து
சான்றோர் உரைத்த தண்டமிழ்த் தெரியல்
**ஒருபது பாட்டும்,"**

என்றும், பாண்டிமண்டல சதக ஆசிரியர்,

"தமிழ்ச்சங்கத்தின், நிலைபெற் றுயர்**பத்துப்பாட்டும்,"**

என்றும், இந்நூலைப் புகழுமாற்றால் இதன் பண்பினை நன்கு உணரலாம். இப் பத்துப்பாட்டுப் பனுவலின் சுவையை நன்கு துய்ப்பவர்கள் ஏனைய இடைக்கால நூல்களைப் படிக்க உளம் கொள்ளார் என்பதையும், பத்துப்பாட்டே உள்ளதை உள்ள வாறு உரைக்கும் வரலாற்று நூல் ஆகும், ஏனையவை கற்பனை

நிறைந்தவை; அக்கற்பனையும் பொருட்கிசைந்த கற்பனை அன்று; இலக்கணத்திற்கு இயைந்த கற்பனையும் அன்று என்பதையும் அறுதியிட்டு உறுதியாக எடுத்துக்காட்டுவார் போலப் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை,

"பத்துப்பாட் டாதிமனம் பற்றினர் பற்றுவரோ
எத்துணையும் பொருட்கிசையும் இலக்கணமில் கற்பனையே,"

என்று பாடி மகிழ்கின்றார்.

இத்தகைய மாண்புவாய்ந்த பெருநூற் கடலினின்று எழுந்த நித்திலங்களை எடுத்துக்காட்டுவது இந்நூல். இயற்கைக்கு ஓர் இருப்பிடம், ஓவியத்திற்கோர் உறைவிடம், உவமையணிக்கோர் உயர்விடம். தமிழக நாகரிகத்தினைத் தனிச்சிறப்புடன் காட்டுதற்குரிய தகவிடம் என்று கூறின் மிகையாகாது

"இருஞ்சேற்று அகல்வயல் விரிந்துவாய் அவிழ்ந்த
முள்தாள் தாமரைத் துஞ்சி வைகறை
கள்கமழ் நெய்தல் ஊதி எல்படக்
கண்போல் மலர்ந்த காமர் சுனைமலர்
அஞ்சிறை வண்டின் அரிக்கணம் ஒலிக்கும், குன்று,"

என்னும் திருமுருகாற்றுப் படையின் அடிகளில் இயற்கையழகின் இயல்பு எத்துணைச் சிறப்புடன் எடுத்து இயம்பப்பெற்றிருக்கின்றது பாருங்கள்.

அழகு நிறைந்த சிறகுகளையுடைய வண்டின் கூட்டம் சேறு நிறைந்த வயலில் மலர்ந்த தாமரை மலரில் இரவு முழுவதும் உறங்கி விடியற்காலத்தே எழுந்து நெய்தல் மலரை ஊதி மாலைப்போது கண்போன்று மலர்ந்த சுனைப்பூக்களிலே சென்று ஒலிக்கும் திருப்பரங்குன்றம் என்பதன்றோ இவ்வடிகளின் பொருள்!

"அறல்போல் கூந்தல் பிறைபோல் திருநுதல்
கொலைவில் புருவத்துக் கொழுங்கடை மழைக்கண்
இலவிதழ் புரையும் இன்மொழித் துவர்வாய்ப்
பலவுறும் முத்தில் பழிதீர் வெண்பல்
மயிர்குறை கருவி மாண்கடை அன்ன
பூங்குழை ஊசல் பொறைசால் காதின்
நாண் அடச் சாய்ந்த நலங்கிளர் எருத்தின்
ஆடமைப் பணைத்தோள் அரிமயிர் முன்கை
நெடுவரை மிசைஇய காந்தள் மெல்விரல்
கிளிவாய் ஒப்பின் ஒளிவிடு வள்உகிர்
அணங்கென உருத்த சுணங்கணி ஆகத்து

ஈர்க்கிடை போகா ஏர்இள வனமுலை
நீர்ப்பெயர்ச் சுழியின் நிறைந்த கொப்பூழ்
உண்டென உணரா உயவு நடுவின்
வண்டிருப் பன்ன பல்காழ் அல்குல்
இரும்பிடித் தடக்கையின் செறிந்துதிரள் குறங்கின்
பொருந்துமயிர் ஒழுகிய திருந்துதாட் கொப்ப
வருந்துநாய் நாவில் பெருந்தகு சீறடி
அரக்குருக் கன்ன செந்நிலன் ஒதுங்கலின்
பால்பகை உழந்த நோயொடு சிவணி
மரல்பழுத் தன்ன மறுகுநீர் மொக்குள்
நன்பகல் அந்தி நடைஇடை விலங்கின்
பெடைமயில் உருவில் பெருந்தகு பாடினி.”

இப்பொருநர் ஆற்றுப்படை அடிகள் ஒரு பெண்ணின் ஓவியத்தை யன்றோ எழுதிக் காட்டுகின்றன. இவ்வடிகளைப் படிக்கும் தோறும் படிக்குந்தோறும் மாதின் உறுப்புக்கள் ஒவ்வொன் றும் நாம் நேரில் காண்பதுபோன்று அல்லவோ காட்சி அளிக் கின்றது.

ஆற்று மணல் போன்ற கூந்தலும், பிறைமதிபோன்ற நெற்றியும் வில்போன்ற புருவமும், குளிர்ந்த கண்களும், செந் நிற வாயும், முத்தன்ன பற்களும், குண்டலம் அணிந்த காது களும், குனிந்த கழுத்தும், மூங்கில் போன்ற தோளும், முன் கையும் காந்தள் மலர்போன்ற விரல்களும் கிளிமூக்கன்ன நகங் களும், பருத்துத்திரண்ட முலைகளும் நீர்ச்சுழி போன்ற கொப் பூழும் நுண்ணிய இடையும் மேகலை அணிந்த அல்குலும், திரண்ட துடைகளும் நாயின் நாப்போன்ற பாதங்களும் உடைய பாடினி என அப்பாடினியைச் சித்திரத்தில் எழுதிக் காட்டுவார் போலக் காட்டி இருக்கும் இப்பொருளைக் காணும் தோறும், எத்துணை இன்பம் பயக்கின்றது என்பதைச் சிந்தித் துப் பாருங்கள். செம்மையும், பசுமையும், வெண்மையும், கரு மையும் முதலான வண்ணங்களைச் சொல்லால் சித்திரித்துக் காட்டும் சுவையினை என்னென்று கூறுவது! இவ்வடிகளே உவமை நயத்திற்கு எடுத்துக்காட்டாக இயம்பலாம். நகத்திற் குக் கிளிவாயும், விரல்கட்குக் காந்தள் மலரும், சீறடிக்கு நாயின் நாவும் எத்துணைப் பொருத்தமான உவமைகள் என்பதை இயம்பவும் வேண்டுமோ?

இனி இப்பத்துப்பாட்டின்கண் நாகரிக நயத்திற்கு இரண் டோர் இடங்களைச் சுட்டிக்காட்டி இக் கட்டுரையினை இனிதின் முடிப்பேனாக. இக்காலத்தில் காணும் மாதர்கள் தாம் எதற்கும்

முன்னணியில் நிற்கவல்லவர். இதோபாருங்கள்; இம் மாது உந்து (Motar Car) வண்டியினை மொய்ம்புடன் விடுகின்றனள். இம்மங்கையினைக் காணுங்கள் எத்துணை வீரமான செயல்களைச் செய்கின்றனள். இத்துணையும் மேனாட்டு நாகரிகம் நம் நாட்டில் புகுந்த பின்னரே நிகழ்ந்த மாதர் உலகநிகழ்ச்சிகளாகும் என்று கூறிப் பெருமிதம் கொள்கின்றனர். அன்னார் நம் தொன்னூல்களைக் காணாத் தொகுதியினர் என்று கூறுவது வேறு அவர்களைக் குறித்து என்ன கூறுவது?

"மகவுடை மகடூஉப் பகடுபுறந் துரப்ப"

என்னும் அடிகளைப் பெரும்பாணாற்றுப் படையில் பார்க்கும் பொழுது எருதுகளை முதுகில் புடைத்து வண்டிகளைப் பூட்டும் திறம் மாதர்கள் பெற்றிருந்தனர் என்பது பெறப்படுகின்றதன்றோ. உந்து வண்டிகளை ஓட்டுவதுகூட எளிது. ஆனால் பீடு நடைக்கு ஓர் எடுத்துக்காட்டாக உள்ளதும், வீரத்திற்கு உறைவிடமாக உள்ளதுமான எருதுகளின் முதுகினை அடித்து அதட்டி ஓட்டும் ஆண்மை தமிழக மாதர் பெற்றிருந்தனர் என்றால் அவர்கள், மென்மையும் வன்மையும் கலந்த வனிதையர்கள் என்பது அறியக் கிடக்கின்றதன்றோ!

மாதர்கள் வீரத்திலும் சிறந்தவர்கள் என்பதற்குப் பல சான்றுகள் நம் தண்டமிழ் நூல்களில் காணப்படுகின்றன. இப் பத்துப்பாட்டில் மாதர்களே வாள் ஏந்தி அரசனை அல்லும் பகலும் போர்க்களத்தில் மெய்காப்பாளர்களாக இருந்து காத்து வந்தனர் என்பதைப் படிக்கும்போது உணர்ச்சியற்றவரும் வீரம் கொண்டு எழவேண்டியவர்களாவார்.

"குறுந்தொடி முன்கைக் கூந்தல்அம் சிறுபுறத்து
இரவுபகல் செய்யும் திண்பிடி ஒள்வாள்
விரவுவரிக் கச்சில் பூண்ட மங்கையர்."

என்பது முல்லைப்பாட்டு அடிகளாகும்.

இன்னோர் அன்ன நயங்கள் பலபடப் பொதிந்து இப்பத்துப்பாட்டில் காணப்படுகின்றன. அவற்றைத் துருவி அறிந்து சுவைத்து இன்பம் பெறுமாறு எவரையும் வேண்டுகின்றனன்.

# பத்துப்பாட்டிற் பறவைகள்

[செல்லூர்க்கிழார் திரு. செ. ரெ. இராமசாமி பிள்ளை]

இம்மாநிலம் இயற்கையும் செயற்கையும் ஈண்டி, இன்பம் மிக்கதாய் இலங்குகின்றது. இதன்கண் இயற்கைப் பெரும் பொருள்களான மண்ணும் விண்ணும் கடலும் யாறும் மலையும் செங்கதிரும் வெண்டிங்களும் விண்மீன்களும் பொருந்திப் பார்ப் போர் கட்புலனையும் கருத்தையும் கவர்வனவாக இருக்கின்றன.

இவைகளின் இயற்கைகளை உற்றுநோக்கினோமானால், இன்பந்தந்து என்றும் மாறா இயற்கையில் மனத்தைப் படிவிப் பனவாக உள்ளன.

இவ் இயற்கைகட் கிடையே எண்ணிறந்த உயிர்வகைகள் வாழுகின்றன. நடப்பனவான யானை குதிரை யாடு மாடு சிங்கம் புலி கரடி மான் மரை ஒட்டகம் முதலிய விலங்குகளும், பறப் பனவான நாரை கொக்கு உள்ளான் மீன்கொத்தி தாரா மயில் குயில் கிளி பூவை அன்றில் தேன்சிட்டு புறா கருடன் பருந்து கழுகு முதலிய பறவைகளும், ஊர்வனவான பாம்பு உடும்பு யாமை ஓணான் பல்லி முதலிய உயிர்களும், ஈ எறும்பு கொசுகு வண்டு முதலிய சிற்றுயிர்த் தொகுதிகளும், நீரில் வாழும் மீன் தொகுதிகளும், சிப்பி சங்கு பவளம் முதலியவைகளும் இருப் பனவான மரஞ் செடிகொடி புற்பூண்டு முதலிய நிலை இயற் பொருள்களும் எண்ணில் அடங்கா அளவு வரம்பற்றனவாகக் காணப்பெறுகின்றன. இவைகளிடத்து அமைந்து கிடக்கும் குண நலங்கள் இறும்பூது பயப்பன; இவைகளின் அழகு இளமை மணம் என்னும் மூவகைப் பண்புகள், அரிய—சிறந்த—செவ்வி வாய்ந்தனவாக மிளிர்கின்றன; இவைகளையே 'கைபுனைந்து இயற்றுக் கவின்பெறு வனப்பு' எனவும், 'மணங்கமழ் தெய்வத்து இளநலம்' எனவும் கூறுவர், புலவர் பெருமகனார் நக்கீரனார்.

இவையிற்றுள், நிலையியற் பொருள்களான மரம் செடி கொடிகள் தளிரும் இலையும் அரும்பும் போதும் பூவும் பிஞ்சும் காயும் கனியும் விதையும் தந்து பல்லுயிர் ஈட்டங்கட்கும் மாந்தராம் நமக்கும் உணவாய் நிழலாய் இடனாய்க் களைகணாய் இருந்து உதவி செய்தலை யாரே அறியாதார்? யாரே காணாதார்? யாரே கேளாதார்?

'அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்
அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி
ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்
நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன'

(திருவாசகம், திருவண்ட : க-௪)

என, மணிமொழிப் பெருமான் அருளிய திருவாசகத்தினும் இவ்வியற்கைகளைச் சுட்டுதலால் அறியப்பெறும்.

கடலும் மலையும், உயர்ச்சி தாழ்ச்சிகளின் உண்மையறங்களைக் கற்பிக்கின்றன; மரம் செடி கொடிகள், கடப்பாட்டை உணர்த்துகின்றன; ஞாயிறு திங்கள் மண்டிலங்கள், பிறப்பிறப்பின் இயற்கைகளைக் காட்டுகின்றன.

'வறியவன் இளமைபோல் வாடிய சினையவாய்ச்
சிறியவன் செல்வம்போல் சேர்ந்தார்க்கு நிழலின்றி
யார்கண்ணும் இகந்துசெய் திசைகெட்டான் இறுதிபோல்
வேரொடு மரம்வெம்ப' (கலி: ௧0)

எனப் புலவர் பெருமான் பெருங்கடுங்கோவும்,

'தேய்தல் உண்மையும் பெருகல் உண்மையும்
மாய்தல் உண்மையும் பிறத்தல் உண்மையும்
அறியா தோரையும் அறியக் காட்டித்
திங்கட் புத்தேள் திரிதரும் உலகம்' (புறம்: ௨௭)

என நல்லிசைப் புலவர் முதுகண்ணன் சாத்தனாரும் புகல்வதால் இதன் உண்மை தெளியப்பெறும்.

இன்னும் எத்தனை எத்தனை இயற்கைகளை அறங்களை இன்பக் கூறுகளை இளமைப் பண்புகளை முதுமைத் துன்புகளை கலையை அறிவை யெல்லாம் கூறாமலே நமக்குக் கூறிக் காட்டுகின்றன. அவைகளின் இயற்கைகளை—வனப்பைச்—செயலைக்—குழைவை—மணத்தைத்—திறத்தை—இன்னமர் அன்புடன் கண்டுகண்டு தெளிந்து அவைகளை 'யான்பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம்' என்று நூல்கள் ஆக்கித்தந்தவர், தொன்று முதிர் நன்றுடைச் சங்கப் புலமைச் சான்றோராவர்.

இப்புலவர் பெருமக்கள், இயற்கைத் தீஞ்சாறாக எமக்குத் திரட்டிக் கொடுத்த அரும்பெருஞ் செல்வங்கள், பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும் கீழ்க்கணக்கும் ஐம்பெருங்காப்பியங்களும் பிறவுமாகிய விழுநிதிப் பேழைகளாகும்.

இவைகளுட் புகின்,

'இருந்தமிழே உன்னால் இருந்தேன் இமையோர்
விருந்தமிழ்தம் ஆனாலும் வேண்டேன்'

என்னும் 'தமிழ் விடுதூது' ஆசிரியர் கருத்துக்கொப்ப அதுவே நினைவாய்க் கனவினும் நனவினும் தோன்றா நிற்கும்.

இத்தகைய சிறப்புடைய நூல்களுண் முன்நிற்பது, பத்துப் பாட்டு என்னும் பண்புறு நூல். பத்துப்பாட்டு பத்தாகிய

பாடலான் இயன்ற நூல் என நூலுக்குக் காரணப் பெயராக அமைந்தது.

பாட்டு என்பது யாது?

குறித்த பொருண்மேற் கவர்ச்சி காட்டிக் கற்பார்க்கு எல்லாவகை நயங்களையும் ஊட்டி இன்னோசையுடன் காட்டாற்று வெள்ளம்போற் கவின்பெற்றுப் பொங்கித் ததும்பி நின்றொளி ரும் தகுதியுடைய தெதுவோ அதுவே பாட்டு. அப்பாடல், வெண்பா ஆசிரியப்பா கலிப்பா வஞ்சிப்பா மருட்பா பரிபாடல் என அறுவகையாக ஆன்றோர் வகுத்துரைப்பர். இவ்வகைகளுள் முன்னிற்கும் நான்குவகைப் பாக்களே பெரும்பான்மையும் பயின்று வருவன. இவற்றுள், இப்பத்துப்பாட்டு, ஆசிரியப் பாவானியன்று யாற்றொழுக்குப்போல் படர்ந்து சென்று ஆழ்ந்து அமைந்து தெளிந்து குளிர்ந்து ஒளிர்ந்து நிறைந்து நிற்பதாகும். இதன்கண் நம்நாட்டு அரசர்கள், வள்ளல்கள், புலவர்கள், பாணர்கள், நானிலமாக்கள் முதலிய பல்லோர்களின் வரலாறு களும் இயற்கைப் பொருள்களின் தன்மைகளும் கவினுற வடித்துக் காட்டப் பெற்றுள்ளன.

இதன் பெருமையை,

'பத்துப்பாட்டுங் கலியும் பாரத்தொல் காப்பியமும்' என் னும் பழம் பாடலும் 'பத்துப்பாட்டாதி மனம் பற்றினார் பற்றுவரோ, எத்துணையும் பொருட்கிசையும் இலக்கணமில் கற்பனையே' என்னும் மனோன்மணீயப் பாடலும் உணர்த்துவ தால் அறியலாம்.

இத்தகைய பத்துப்பாட்டுள் இயற்கைப் பொருள்களான மரஞ்செடி கொடிகளும் விலங்குகளும் பறவைகளும் ஆங்காங்கே போதருகின்றன. அவையிற்றுள், பறவைகள் நமக்குப் பல் வகைய இன்பந்தந்துதவுவதோடு ஊறு செய்யா உயர்பண்பு மிக்கனவாய் விளங்குவன ஆகலான், பறவைகளின் இயற்கையை அவ்வவ் ஆசிரியர் காட்டிய திறங்கொண்டு காட்டலாமெனத் துணிகின்றேன்.

இப் பத்துப்பாட்டு: (க) திருமுருகாற்றுப்படை, (உ) பொருந ராற்றுப்படை, (௩) சிறுபாணாற்றுப்படை, (௪) பெரும்பாணாற்றுப் படை, (௫) முல்லைப்பாட்டு, (௬) மதுரைக்காஞ்சி, (எ) நெடுநல் வாடை, (அ) குறிஞ்சிப்பாட்டு, (௯) பட்டினப்பாலை, (க0) மலைபடு கடாம் என்பனவாம்.

இவைகளுள் வரும்பறவைகள் நூல்முழுதும் துருவிப் பார்க்குங்கால் (கஎ) வகையின; அவைகளின் தன்மைகளை அவ்வவ் ஆசிரியர் காட்டிய தொடர்ப்படி காட்டிச் செல்லுவாம்:

## (க) கோழி

முதற்கண்ணுள்ள திருமுருகாற்றுப்படை முதல் மற்றைப் பாட்டுக்களினும் காணக்கிடக்கும் பறவைகளுள் கோழியும் ஒன்றாகும். அதில் சம்பங் கோழியும் வீட்டில் வளர்க்கின்ற கோழியும் பிற்காலத்தில் தோன்றிய வான்கோழி கிண்ணிக் கோழி முதலியனவுமாகும்.

இவைகளுள் இல்லில் வளர்கின்ற கோழி நமக்குப் பேருதவியாக இருப்பது. நம் இல்லங்களிற் போதரும் பாம்புக்குட்டி தேள் செய்யான் பூரான் அரணை பாய்ச்சை முதலிய நச்சுயிர்களைக் கொன்றுதின்பதோடு இல்லங்களில் நம்மாற்கழிக்கப் பெறும் கழிவுப் பொருள்களையும் உண்டு தூய்மையாக்குவது. இரவுப் பொழுது நீங்கி விடியல் வருவதை முன்னரே கூர்த்தறிந்து கூவி நமக்கு உணர்த்தி நம்மைத் துயிலெழுந்து கடமைகளைச் செய்யத்தூண்டும் தகைமை சான்றது; இதைக்கொன்றுண்பது இயற்கைக்கும் இறைவன் படைப்பு நோக்கத்துக்கும் மாறுபட்டதாகும். இவ் வழக்கம் பண்டைக்கால முதல் பழக்கமாக இருந்து வருகின்றது. இதனை 'மனைவாழ் அளகின் வாட்டொடு பெறுகுவிர்' என இப்பத்துப்பாட்டுப் பெரும்பாண் (உடுசு) அடியினால் அறியக் கிடக்கின்றது.

இக் கோழியின் உயரிய குணநலங்களைக்கண்டே முருகவேட்குக் கோழியுருவினைக் கொடியில் எழுதி அமைத்தனர் போலும்!

இதனைப் பத்துப்பாட்டில் வைத்துள்ள வகை:

'கோழி ஓங்கிய வென்றடு விறற்கொடி' (திருமுருகு : நஅ)
'வாரணக் கொடியொடு வயிற்பட நிறீஇ' ( ,, : உகக)
'புகரில் சேவலங் கொடியன்' ( ,, : உகO)
'கோழி வயப்பெடை இரிய' ( ,, : நகக)
'கானக் கோழி கதிர்குத்த, மனைக்கோழி தினைக்கவர' (பொருநர் : உஉஉ-ந)
'கோழி சேக்கும் கூடுடைப் புதவின்' (பெரும் : ருஉ)
'மனைவாழ் அளகின் வாட்டொடு பெறுகுவிர்' ( ,, : உடுசு)
'மனையுறை கோழியொடு ஞமலி துன்னாது' ( ,, : உகூக)
'கோழி எறிந்த கொடுங்காற் கனங்குழை' (பட்டின : உந)
'பல்கோழி உறைகிணற்றுப் புறச்சேரி' ( ,, : எடு)
'கானக் கோழி கவர்குரற் சேவல்' (மலைபடு : ருOக)

## (உ) மயில்

மயில் அழகுமிக்க பறவை. இதன் தோகைகள் பளபளவென்று ஐவகை வண்ணமும் அமைவுறப்பெற்று மிளிருவது;

காண்பவர் கருத்தைக் கவர்வது; இதில் ஆண்மயிலே தோகையுடன் விளங்குவது; பெண் தன்மையுடையது; நம்முடன் வாழ்க்கைத் துணையாய் வாய்ந்து தாய்மைப்பேறு பெற்றுள்ள நங்கையரைக் கூறும்போதெல்லாம், மயிலையே உவமங் காட்டுவது புலவர்தம் மரபு; இதைக்குறித்துப் பேசாத - இடனமையாத நூல், தமிழ்மொழியில் இல்லை யெனலாம். இதன் சாயலும் தோகையின் இயற்கையும் காணும்போதெல்லாம் மெல்லியலாரின் நல்லியல்பைக் கண்டின்புறல் இயல்பு; இஃது, இளகா மனத்தையும் இளகவைக்கும் தகையது; இது பெண்மையின் வண்மையை உண்மையிற் காட்டுவது; அதனால் தொல்காப்பியர் தாம் வகுத்த இலக்கண நூலில் பிற பறவைகட்கெல்லாம் பொது ஆண்பாற் பெயரான 'சேவல்' என்ற பெயர் மயிலுக்குச் சாலாதென மரபு அமைத்து,

'சேவற் பெயர்க்கொடை சிறகொடு சிவணும்
மாயிருந் தூவி மயிலலங் கடையே' (தொல், பொருள் : ௬0௩)

என்றார். இதற்கு உரைகண்ட பேராசிரியர்,

"மாயிருந்தூவி மயிலென்றதனான், அவை தோகையுடையவாகிப் பெண்பால் போலும் சாயலவாகலான் ஆண்பாற்றன்மை இலவென்பது கொள்க. எனவே, செவ்வேள் ஊர்ந்த மயிற்காயின் அது(வும்) நேரவும் படுமென்பது."

இம் மயிலைக் குறித்துப் பத்துப்பாட்டு பகருவன :

'பல்பொறி மஞ்ஞை வெல்கொடி அகவ' (திருமுருகு : ௧௨௨)
'மயில்கண் டன்ன மடநடை மகளிர்' ( ,, : ௨0௫)
'தகரன் மஞ்ஞையன்' ( ,, : ௨௧0)
'பொறிப்புற, மடநடை மஞ்ஞை பலவுடன் வெரீஇ' ( ,, ௩0௯-௧0)
'மடக்கண்ண மயிலால' (பொருநர் : ௧௯0)
'கலவம் விரித்த மடமஞ்ஞை' ( ,, : ௨௧௨)
'கான மஞ்ஞைக்குக் கலிங்கம் நல்கிய' (சிறுபாண் : அ௫)
'மணிமயிற் கலாபம் மஞ்சிடைப் பரப்பி' ( ,, : ௨௬௪)
'பீலி மஞ்ஞையின் இயலி' (பெரும்பாண் : ௩௩௧)
'மஞ்ஞை ஆலும் மரம்பயில் இறும்பின்' ( ,, : ௪௯௫)
'ஏவுறு மஞ்ஞையின் நடுங்கி' (முல்லைப் : அ௪)
'மயிலகவும் மலிபொங்கர்' (மதுரைக் : ௩௩௩)
'மயிலிய லோரும்' ( ,, : ௪௧அ)
'நன்மா மயிலின் மென்மெல இயலி' ( ,, : ௬0அ)

‘அணிமயில் அகவ’ (மதுரைக்: சுஎடு)

‘மயிலோ ரன்ன சாயல்’ ( ,, : எ0சு)

‘கலிமயில் அகவும் வயிர்மருள் இன்னிசை’ (நெடுநல்: கக)

‘சூருறு மஞ்ஞையின் நடுங்க’ (குறிஞ்சிப்: கசுக)

‘நீர்செத் தயின்ற தோகை’ ( ,, : ககக)

‘வலைப்படு மஞ்ஞையின் நலஞ்செலச் சாஅய்’ ( ,, : உடு0)

‘மயிலியல் மாஞேக்கின்’ (பட்டினப்: கசக)

‘கணங்கொள் தோகையின் கதுப்பிகுத் தசைஇ’ (மலைபடு: சச)

‘கலவ மஞ்ஞை கட்சியில் தளரினும்’ ( ,, : உநடு)

‘வரைப்பொலிந் தியலும் மடக்கண் மஞ்ஞை’ ( ,, : ௫0க)

## (௩) குயில்

இது, காதலர்க்கு இன்பச்செய்தியை ஊட்டித் துன்புறுத்தும் பறவை. இதில் வரிக்குயில், கருங்குயில், செம்போத்தெனப் பல்வகையுண்டு. இதன் மெல்லிய குரல் காதுக்கு இன்பம் ஊட்டுவன. உருவில் சிறிய வடிவமும் குரலால் இன்பமும் தருதலால் இதைக்குறித்து இலக்கியங்களில் பரந்து வருவதலைக் காணலாம்.

இதைக்குறித்துப் பத்துப்பாட்டு நுவல்வது :

‘குயில்குடைந் துதிர்த்த புதுப்பூஞ் செம்மல்’ (சிறுபாண் : சடு)

‘குயில்தம், மாயிரும் பெடையோ டிரியல்போகி’ (பட்டினப் : ௫௫சு)

## (ச) கிளி

கிளியின் பசுமைநிறனும் சிவந்த வளைந்த கூரிய வாயும் பெண்ணணங்கார்போற் பேசும் இனிய மெல்லிய குரலும் இன்பத்தை வளர்க்குந் தகையன. கிளி யென்ருல் விழையாதார் யாவருளர்? இதில் பசிய நிறனன்றி வெண்ணிறக்கிளியும் ஐந்துநிறக் கிளியும் உள்ளன. இவைகளில் உருவிற் சிறிய பெரிய உள.

இதன் இன்குரலைக் கேட்டு மகிழவே, வீட்டில் கூட்டுள் அடைத்து வளர்ப்பர். இது, தினைக்கொல்லைகள், தோட்டங்கள், வயல்கள் முதலிய இடங்களில் விளைந்துகிடக்கும் கதிர்களைப் பறித்துக் கொணர்ந்து பறந்துசெல்லும்; மரப்பொந்துகளில் கூடுகட்டிக் குஞ்சு பொரிக்கும்; மடவார் தினைக்கொல்லைகளைக் காப்பது, இவைகளை ஓட்டுதல் கருதியேயாம்.

இதைக் குறித்துப் பத்துப்பாட்டு பகருவது:

'கிளிவாய் ஒப்பின் ஒளிவிடு வள்ளுகிர்' (பொருநர்: ருச)
'கொடுவாய்க் கிள்ளை படுபகை வெரூஉம்' (பெரும்பாண்: உஉஎ)
'வளைவாய்க் கிள்ளை மறைவிளி பயிற்றும்' ( ,, : ருOO)
'தினைவிளை சாரல் கிளிகடி பூசல்' (மதுரைக் : உகூக)
'கிள்ளை ஒப்பியும் கிளையிதழ் பறியா' (குறிஞ்சிப்: கOக)
'கிளிமழலை மெல்சாயலோர்' (பட்டினப்: கடுO)
'பைங்கிளி மிழற்றும் பாலார் செழுநகர்' ( ,, : உசுச)
'கிளிகடி மகளிர் விளிபடு பூசல்' (மலைபடு : ருஉக)

## (ரு) அன்னம்

அன்னம் நீர்வாழ் பறவை. மெல்லிய இயற்கைத் தன்மையது; குறுகிக்குறுகி மெல்ல நடக்கின்ற பான்மையது; கால் விரல்களின் இடையே தோல் இணைந்த தன்மையுடையது; இதனால் இதன் நடையை இளமாதர் மென்னடைக்கு ஒப்புரைப்பர். இது பாலும் நீரும் கலந்திருந்தாலும் தனித்தனியே வேறுபிரித்துப் பாலைமட்டும் உண்ணும் அரும்பண்புடையது என்பர், பண்டை நூலாசிரியர். இக்காலத்து நம்நாட்டில் இஃதில்லை. வெளிநாடுகளிலிருந்து நம் நாட்டிற்குக் கண் காட்சிக்காகக் கொணரப்படுகின்றது. கருநிற வெண்ணிறமுள்ள இருவகை அன்னங்கள் காணப்பெறுகின்றன.

இதைப் பத்துப்பாட்டு சித்திரிப்பது:

'அலைநீர்த் தாழை அன்னம் பூப்பவும்' (சிறுபாண் : கசசு)
'செங்கால் அன்னத்துச் சேவ லன்ன' (மதுரைக் : ருஅசு)
'அன்னங் கரைய அணிமயில் அகவ' ( ,, : சுஎரு)
'குறுங்கால் அன்னமோ டுகளு முன்கடை' (நெடுநல் : கூஉ)

## (சு) அன்றில்

அன்றில் கருநிறமுடைய பறவை. காதல் மிக்கது; ஆணும் பெண்ணும் பிரியாமல் ஒன்றுபட்டுப் பிணைந்து வாழ்வன; ஒன்றைவிட்டு ஒன்று பிரிந்தால் உயிர் வாழாது இறந்துபடுமென்பர்.

பத்துப்பாட்டில் காணக்கிடப்பது:

'கொடுவாய் அன்றில், ஓங்கிரும் பெண்ணை அகமடல் அகவ'
(குறிஞ்சி : உககூ-உO)

## (எ) புறா

புறா காதல் மிக்குடைய பறவை. இதை வீட்டில் வளர்ப்ப துண்டு. மேல்மாடங்களில் கூடுகட்டி வாழ்வது; இதில் பல் வகை நிறனுண்டு; மாடப்புறுவன்றிக் காட்டில் வாழும் புறவு களில் தவிட்டுப்புறா, மணிப்புறா முதலிய பலவகை இனங்க ளுண்டு. தன் காதற்கிழமையுள்ள ஆணோ பெண்ணோ பிரிந் தால் அப்பிரிவுக்கு ஆற்றாது மரக்கிளைகளில்தனித்திருந்து தன் துணையைக் கூவிக்கூவி அழைத்துக் கத்தும்.

இதைப் பத்துப்பாட்டு பன்னியுரைப்பது:

'மனையுறை புறவின் செங்காற் சேவல்' (நெடுநல்: ௪௫)

'தூதுணம் புறவொடு துச்சிற் சேக்கும்' (பட்டினப்: ௫௮)

## (அ) வானம்பாடி

வானம்பாடி, இது வானத்தின்கண் உயரப் பறந்துசென்று பாட்டுப் பாடுவதால் இப்பெயர் பெற்றது. இது சிட்டுக் குருவிபோல் வடிவிற் சிறியதாயினும் மேகமண்டிலம் வரையிற் பறந்துசென்று இன்குரல் எடுத்துப் பாடுதல் உடையது. மேகத்தில் கிடைக்கும் நீரையுண்டு மகிழுமென்பர். 'நீரிடும்பை, புள்ளினுள் ஓங்கல் அறியும்' என்றார் நான்மணிக்கடிகை ஆசிரியர்.

இதுகுறித்துப் பத்துப்பாட்டில் வருவது:

'தற்பாடிய தளியுணவின், புள்தேம்பப் புயல்மாறி' (பட்டினப்: ௨௩)

## (கூ) கவுதாரி

இதை இக்காலத்தில் 'கதுவாளி' என வழங்குவர்; இது விரைந்து நடந்து செல்லும் வன்மை மிக்கது. இதை வளர்த்துப் போர்செய்ய அதன் காலில் வாள் கட்டிவிடுவர். இவ் விளை யாட்டு பண்டைக்காலந்தொட்டு நம் நாட்டில் பொழுது போக்காக நிகழ்ந்து வருவதாகும்.

இதுபற்றிப் பத்துப்பாட்டுப் பகர்வது:

'மேழகத் தகரொடு சிவல்விளை யாட' (பட்டினப்: எஎ)

(தொடரும்.)

# பத்துப்பாட்டும் - நன்னெறியும்

[கழகப் புலவர், சித்தாந்த பண்டிதர், ப. இராமநாதபிள்ளை]

தொல்காப் பியமுன்நூல் சொல்லுங் கடவுள்நெறி
ஒல்காச் சிவநெறியாம் உண்மையினைப்—பல்கால்
பழகுபத்துப் பாட்டின்கண் பார்த்துணர்ந்து காட்டும்
அழகுதமிழ்ச் சான்றோர்மெய் அன்பு.

## முப்பொருள்

திருவருள் துணையால் புலமிக்காராய்ப் பொருள் உண்மை தெளிந்து போற்றிப்புகலும் புலவராம் மெய்யுணர்வுச்செல்வர்கள் ஐயமின்றித் துணிந்த பொருள் மூன்றென்ப. அவை, கடவுள், உயிர்க்கிழவன், கட்டு. கடவுள் உயிர்க்கிழவனும் ஆன்மாக்களைக் கட்டினின்றும் விடுவிக்கும் விழைவினுற் செய்யும் திருவருட் செயல் ஆட்டுதல் என்ப. விடுவித்துத் தன் திருவடியிற் கூட்டி இறவா இன்பப் பெருவாழ்வு நல்கும் திருவருட் செயல் கூட்டுதல் என்ப. இவ்விரண்டனையும் தன் அறிவாற்றலாம் திருவருள்—ஆணையால் நிகழ்த்துவிக்கின்றனன். ஆட்டுந் திருவருள் நடப்பு எனவும், கூட்டுந் திருவருள் வனப்பு எனவும் வழங்கப்பெறும்.

ஆண்டவன் அடியிணை சேர்ந்து இன்புறும் உரிமையுடைய ஆருயிர்த்தொகைகள் அளவிறந்தன. அவற்றுட் சிறந்தவை மக்களும் தேவரும். இவர்களும், மலப்பிணிப்பின் வேறுபாட்டால் மூவகையினராவர். அவர், ஒரு மலத்தார், இரு மலத்தார், மும்மலத்தார். கட்டும், உடனுய்சிற்கும் மலமும், அம்மலத்தைப் போக்கும் மருந்தனைய வினையும், மருத்துக்கலம் மருத்துணுவாக இடையே சேர்க்கப்பெறும் உடல் உலகு உண்பொருள்களின் முதலாம் மாயையும் என மூவகைப்படும். இவற்றை அருளாசான் அருமறை (உபதேசம்) வழி உணர்ந்து ஒழுகுவதே நன்னெறி என்ப. உணரும் நேரமே சமயம் என்ப.

## முப்பண்பு

பழந்தமிழர் திருவருளாற் கண்டு மேற்கொண்டொழுகிய விழுமிய நன்னெறி முழுமுதற்சிவம் கெழுமிய சைவமாகும். இற்றைக்கு ஐயாயிரத்தறுநூறுண்டுகட்கு முந்தியதென ஐயமின்றித் துணியப்பட்ட ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியத்திற்கும் பன்னூறு ஆண்டுகளுக்கு முந்தியதாகத் திகழும் பொய்யாநாவிற் றெய்வப்புலவர் முரஞ்சியூர் முடிநாகராயர் பாடி

யருளிய புறநானூற்று "மண்டிணிந்த" எனத் தொடங்கும் திருப்பாட்டில் "அந்தி அந்தணர் அருங்கட னிறுக்கும், முத்தீ விளக்கு...." என வரும் திருமொழி சிவநெறியாம் நன்னெறியையே குறிக்கும். இதுவே சைவமெனச் சான்றோரால் வழங்கப்பெறுவது. முத்தீ அறம் பொருள் இன்பமாம் முத்திற ஒழுக்கமும் நிகழத் துணைசெய்யும் விளக்கமாகும். இவ் விளக்கமே ஆண்டானது அன்பு, அறிவு, ஆற்றல் (இச்சை ஞானம் கிரியை) களைக் குறிப்பதாகும். ஆருயிர்கட்கும் அன்பு, அறிவு, ஆற்றல்களுள. இம்மூன்றும் ஆண்டவனின் அன்பறிவாற்றல்கள் உடங்கியைந்து நின்று பிரிப்பின்றி விளக்க விளங்குவன. ஆண்டவனுக்கு உரிய மூன்றும் தாமே விளங்குவன. இம் முப்பண்புகளையுமே தொல்காப்பியனார் முறையே கொடிநிலை கந்தழி வள்ளி என்றனர். இவற்றை விளக்குவதே முத்தீ வேள்வியாகும்.

"கொடிநிலை கந்தழி வள்ளி யென்ற
வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்
கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே."

—தொல். பொருள் - அஅ.

இதன்கண் வடுநீங்கு சிறப்புத் தாமே விளங்குவன. முதலன அம்மூன்றனையும் இயல்பாகவுடைய மன்னுயிர்கட்கு விளக்குதற்குக் காரணமாகவிருப்பன. கண்ணிய வருதல் பண்பியைப்போன்று பண்பையும் வாழ்த்த வருதல். அஃது, "ஈறிலாப் பதங்கள் யாவையும் கடந்த இன்பமே என்னுடைய அன்பே" என்னும் ஆளுடைய அடிகள் திருப்பாட்டாலுணரலாம்.

தொன்மைத் தமிழர் கண்ட நன்மைத் தமிழ்நெறி சைவச் செந்நெறியே. இச் செந்நெறியே ஒரு முழுமுதற் கடவுட் கொள்கையுடைய விழுமிய நெறியாகும். கடவுட் பெயர்கள் பலவாதல்பற்றிக் கடவுளும் பலவாகா. பலவென மயங்குவார்க்கு மயக்கொழிப்பதே மெய்ந்நூற் றுணிபாகும். இதனைப் பத்துப்பாட்டுள் முதற்கண் திகழும் திருமுருகாற்றுப்படை குறிஞ்சிக்கிழவனாகிய சேயோனே அந்தணர்க்கும், முனிவர்க்கும், வானவர்க்கும், கானவர்க்கும், ஏனையர்க்கும், ஆருயிர்க்கும் முழுமுதல் என வலியுறுத்துவது காண்க. இந்நெறி பற்றியே திணைநிலைத் தெய்வமாகக் கூறப்படும் பொருளியல் நூற்பாவுக்கும் பொருள் கொள்ளுதல் வேண்டும். அந்நூற்பா :—

"மாயோன் மேய காடுறை யுலகமும்
சேயோன் மேய மைவரை யுலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்

வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல்எனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே."

—தொல். பொருள் - ரு.

இதனுள், வேந்தன்—சிவபெருமான், வருணன்—காரியுண்டிக்கடவுள். இம்முறையே சைவச் செம்முறை என்பதை ஆளுடையபிள்ளையார் அருளிய திருப்பாட்டும் வலியுறுத்துகின்றது. அது,

"மாயவன் சேயவன் வெள்ளி யவன்விடஞ் சேரும் மைமிடற்றன்
ஆயவ னாகியொ ரந்தர மும்மவ னென்று வரையாகம்
தீயவன் நீரவன் பூமி யவன்திரு நாரை யூர்தன்னில்
மேயவ னைத்தொழு வாரவர் மேல்வினை யாயின வீடுமே."

—திருமுறை, ௩. ௧0௨ - ௩.

இதனுள், வெள்ளியவன்—வேந்தன். மைமிடற்றன்—காரியுண்டிக்கடவுள். இம்முறையினையே உட்கொண்டு பாரதம் பாடிய பெருந்தேவனார் என்னும் நல்லிசைப் புலவர் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு முதலியவற்றுக்கு முறையே மாயோன், சேயோன், சிவன், மணிமிடற்றந்தணன் எனத் திருப்பெயர் சூட்டி வாழ்த்துப் பாடியருளினர். காரியுண்டல் உவர்நீக்கி வானமிழ்தருளல்.

எத்திறத்தாரும் தத்தம் இயல்புக்கும் சூழ்வுக்கும் ஏற்றவாறு கடவுளை என்றும் வழிபட்டு வான்பயன் பெற்று வாழ்ந்துவருகின்றனர் என்பதும், ஆண்டவனும் அவரவர்க்கு வேண்டிய அருளிப்பாட்டைச் செய்தருளுகின்றனன் என்பதும் கண்டு கொள்ளச் சில குறிப்புக்களைத் தருகின்றோம்.

க. திருமுருகாற்றுப்படை : 1. திருப்பரங்குன்றம்:—

௬0. "மறுவில் கொற்றத்து
எய்யா நல்லிசைச் செவ்வேற் சேஎய்
சேவடி படருஞ் செம்மல் உள்ளமொடு
நலம்புரி கொள்கைப் புலம்பிரிந் துறையும்
செலவுநீ நயந்தனை யாயிற் பலவுடன்
௬௫. நன்னர் நெஞ்சத் தின்னசை வாய்ப்ப
இன்னே பெறுதிநீ முன்னிய வினையே"

—மெய்யுணர்வுச்செல்வர்.

2. பல்வகைத்திருவருள் :—திருச்சீரலைவாய், ௯0—௧௧௪ வரிகளில் ஞாலம், ஆர்வலர், அந்தணர், முனிவர், செறுநர், காதலர், இவை திருமுகம் ஆறினும் செய்யும் திருவருள்.

ஐயர், உக்கம், குறங்கு, அங்குசம், பரிசை, வேல், மார்பு, தார், சுழல்வு, மணி, மழை, வதுவை எனத் திருக்கைகள் பன்னிரண்டினாலும் செய்யும் திருவருள்.

3. திருவாவினன்குடிக்கண் :—முனிவர், (கஙஎ) கந்தருவர் (க௪எ) திருமால் (கடுக) முக்கண்ணன் (கடுச) வானவர் கோன் (கடுகூ) நான்முகன் (கசுடு) முப்பத்துமூவர் (ககூஎ) பதினெண்மர் (கசுஅ) முதலாயினர்க்கு ஆற்றிய திருவருள் காண்க.

4. திருவேரகம் :—ககஎ—கஅகூ. அந்தணர் செய்யும் வழிபாடும், கணிக்கும் மந்திரமும், முறைமையும் பிறவும் கூறப் படுகின்றன.

5. குன்றுதோறாடல் :—குன்றவர் கிளையுடன் மகிழ்ந்து தொண்டகம் குரவை அயர வேறுபல கோலங்கொண்டு ஆடிப்பாடி வழிபடுதல் (ககூ0-உகஎ).

6. பழமுதிர்சோலை :—கோழிக்கொடி நட்டு வழிபடல் (உகஅ-உஉ0) ஆர்வலர் வழிபாடு, (உஉக) வெறியாட்டு (உஉஉ) காடு, காவு, துருத்தி, யாறு, குளம், பலவூர்கள், சதுக்கம், சந்தி, கடம்பு, மன்றம், பொதியில், கந்து முதலிய இடங்களில் கொடி நட்டுக் காப்புக் கட்டி, கோலங்கொண்டு, படையலிட்டு, இயம் இயக்கி, ஆடல் பாடல் முதலிய நிகழ்த்தி, தெய்வக் கொள்கை இல்லாரும் மெய்யாகத் தேறும்வண்ணம் வழிபடல். (உஉங-உசச) அவ்வழிபாட்டை ஏற்று முருகப்பெருமான் அவரவர் வேண்டிய வரம் நல்கல். (உசடு-உசகூ)

உ. பொருநராற்றுப்படை : தெய்வ வழிபாட்டால் வேண்டுவ பெற்றுவாழும் மாந்தர், விழாக்கொண்டாடி, விருந்தயர்ந்து, ஈந்து புகழ்பெற்று இன்புறுவர். விழாவைத் திருநாள், பெருநாள், சிறப்பு, சாறு முதலிய சொற்களாலும் கூறுவர்.

சாறுகழிவழிநாள் (உ), காடுறை கடவுள் கடன் கழித்தல் (டுஉ), முருகனை ஒப்பாகக் கூறுதல் (கஙக).

ங. சிறுபாணாற்றுப்படை : முழுமுதற் கடவுளாம் சிவபெருமானுக்குத் தாம் பெற்ற உயர்ந்த உயிர்ப்பொருள் உயிரல் பொருள்களையும் நல்கி வழிபட்டு நனிமகிழ்தல்—ஆய் என்னும் வள்ளல் அன்புடன் அளித்த ஆடை கூறப்படுகின்றது (கூடு-கூகூ). தெய்வ உறைவிடம் கடவுண்மால்வரை என்று கூறப் படும் (உ0டு).

௪. பெரும்பாணாற்றுப்படை : முருகன் ஒப்பு (எ௫), தெய்வங்களுக்குப் பலியிடுதல் தெய்வமடை எனப்படும் (௧0௪), கடவுளுக்கு நேர்ந்த பொருள்களைக் கடவுளுக்கே பயன்படுத்தல் (௨௯0), "பாம்பணைப் பள்ளி அமர்ந்தோன்" திருவூராம் திருவெஃகா (௩எ௩), அதனை வாழ்த்துதல் (௩௯௩), திருமாலின் உந்தியில் நான்முகன் தோற்றம் (௪0௨).

௫. முல்லைப்பாட்டு : திருமால் ஒப்பு (௩), பெண்கள் விரிச்சி (நற்சொல்) கேட்கத் திருவிளக்குமுன் நெல்லும் மலருந் தூஉய் வழிபடல் (அ).

௬. மதுரைக்காஞ்சி : திருவிழா நிகழ்த்தல் (௯அ), திருப்பரங்குன்றத் திருவிழா (௨௬௩), மதுரைமாநகர்த் திருவிழா (௩௨எ), திருக்கோவில்களில் கொடி ஏற்றித் திருவிழாச் செய்யும் முறைமை (௩௬௬), ஐம்பூத முதலிய எல்லாம் படைத்தருளிய முழுமுதல் மழுவாள் நெடியோன் (சிவன்) (௪௫௩), தெய்வங்கட்குச் செய்யும் அந்திவிழா (௪௬0), மாயோனுக்கு ஆற்றும் திருஓணத்திருநாள் (௫௯0), வேலன் வெறியாட்டு (௬௧௧), திருவிழாக்களில் கூத்து நிகழ்தல் (௬௨அ), நடுயாமத்துத் தெய்வம் நடமாடல் (௬௫௧), அந்தணர் அருமறை ஓதல் (௬௫௬), கடவுட்கென நேர்ந்துவிட்ட தாமரை மலர்கள் (எ௧0).

எ. நெடுநல்வாடை : இல்லுறை தெய்வத்தை நெல்லும் மலரும் தூஉய் வழிபடல் (௪௩), புலத்(திசை) தெய்வம் போற்றல் (அஎ).

அ. குறிஞ்சிப் பாட்டு : கடவுட் பேணலும் பேணுமுறைமையும் (௫-எ), முருகப்பெருமானின் வேல் ஒப்பு (௫௧), முருகனை வழிபடுங் களவொப்பு (௧எ௪), விழாக் கொண்டாடல் (௨0௧), கடவுளை வாழ்த்திக் கைதொழல் (௨0௯), அந்திக் காலத்துத் திருவிளக்குப் பொருத்தி வழிபடல் (௨௨௪), அந்தணரும் அந்திக்காலத்து வழிபடல் (௨௨௫).

௯. பட்டினப்பாலை : கதவில் திருமகள் எழுதல் (௪௧), முனிவர் எரியோம்பல் (௫௪), சுறாக்கோடு நட்டு வழிபடல் (அ௬), செவ்வேள் வெறியாடுகளன் (௧௫௪), திருநாள் (௧௫அ), அரிசிப் பலி நல்கல் (௧௬௫), தெய்வத்துக்கு நல்கும் பலி (௧எ௯), தேவர் வழிபாடும் ஆவுதி நல்கலும் (௨00), திருவிழா (௨௧௫), பெண்கள் திருவிளக்குப் பொருத்தி அந்திக்காலத்து வழிபடும் கந்துடை அம்பலம் (௨௪௯), இசையரங்கோடியைந்த திருநாள் (௨௫௫).

௧0. மலைபடுகடாம் : காரியுண்டிக் கடவுளாம் சிவபெருமானின் தன்மை (அ௧-௩), வேலன் வெறிக்களம் (௧௫0), பாம்பு

மகிழ விறலியர் கைதொழல் (௨00), திருக்கோவிற் கடவுள்வழி பாடு (௩௬௬), திருவிழா (௪அ௧), முருகன் ஒப்பு (௪௬௩), கடவுள் வாழ்த்து எல்லாச் செயற்குமுன் முதற்கண் நிகழ்த்தும் முறைமை (௫௩அ).

கூடலம் பதிக்கண் நிகழ்ந்த தண்டமிழ்ச் சங்கத்து எண்டிசைவிளக்கும் அண்டவாணனும் முக்கட் செல்வன், பொய்யா நாவிற் புலவர் பெருமக்கள் தூயவுள்ளத்தை நிலைக்களனாகக் கொண்டு அவ்வப்போது நிகழ்த்துவிக்கும் பொருள் நிறை பாட்டுக்களே யன்றிப், புறத்தும் புலவர் திருக்கோலத்துடன் திகழ்ந்து பாட்டும் பொருளும் கேட்பார் வியக்க அருளும் அருளிப்பாடும் உண்டென்பது திருமுறை முதலிய புகழ் நூற்கண் விளங்குவது காண்க. அது, வருமாறு

"மின்காட்டுங் கொடிமருங்கு லுமையாட் கென்றும்
விருப்பவன்காண் பொருப்புவலிச் சிலைக்கை யோன்காண்
நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கம் ஏறி
நற்கனகக் கிழிதருமிக் கருளி னோன்காண்
பொன்காட்டக் கடிக்கொன்றை மருங்கே நின்ற
புனக்காந்தன் கைகாட்டக் கண்டு வண்டு
தென்காட்டுஞ் செழும்புறவிற் றிருப்புத் தூரில்
திருத்தளியான் காணவனென் சிந்தை யானே."

ஆளுடைய அரசு, ௬-௨௬0-௩.

இதுகாறுங் கூறியவாற்றால் தொல்காப்பியனார் காலத்துக்குப் பன்னூறு ஆண்டுகளுக்கு முன்னிருந்தே தமிழ்ச்சான்றோர் மேற்கொண்டு ஒழுகிவரும் நன்னெறி சிவனெறி எனவும், அவ்வுண்மை தொல்காப்பிய முதலிய மெய்ந்நூற்கண் பரக்கக் காணலாமென்பதும், பெயர் பலவாயினும் ஒரு முழுமுதற் கடவுட் கொள்கையே விழுமிய தமிழர் தனிக்கொள்கை யென்பதும், கடவுள் வழிபாடு திருக்கோவில், இல்லங்கள், தெருக்கள், ஆற்றிடைக்குறை, சதுக்கம், சந்தி, வெறியாடுகளம் முதலிய பல்வேறிடங்களில் பல்வேறு நெறிமுறையாய் நிகழ்வதென்பதும், இடையிடையே திருவிழாக் கொண்டாடிச் சிறப்புறுவதுண்டென்பதும் பிறவும் விளங்கும். அதற்கு வேண்டும் அகச்சான்று பத்துப்பாட்டினின்று பாட்டின் வரி எண் குறிப்புடன் தரப்பட்டுள்ளது. இது கருவியாகக்கொண்டு பத்துப்பாட்டுப் பழநூலும் அதன் பிழிவாம் சொற்பொழிவு நூலும் கற்றுக் கடவுட்கொள்கை கடைப்பிடித்து ஒழுகி உய்வார்களாக.

**என்றும் இறைபணி இனிது வாழ்க.**

---

# பத்துப்பாட்டு மாநாடு - திறப்புரை

[இராவ்சாகிப், சித்தாந்த சைவப்புலவர், டாக்டர்
தி. இரா. அண்ணாமலைப் பிள்ளை L.C.P.S., L.M.S.S.A. Lond.
திருக்குற்றாலம் (தென்காசி)]

மெய்யன்பர்களே!

இத்தகைய பேரவை பொலிந்த மாநாட்டிற் கலந்துகொள்ளும் ஆகூழ் எனக்குக் கிட்டியதற்கு, எல்லாம் வல்ல இறைவன் திருவடிகளை மனமார வணங்குகின்றேன். கவின்பெறு வனப்போடு அமைந்துள்ள இக்கலைக் கோயிலை இயற்றித் தந்தருளிய தருமபுரம் மகா சந்நிதானத்தின் அருட்கருணைக்கு மும்முறை வணக்கம். இங்குத் தலைமை தாங்கும், புலவரிற் புலவர் டாக்டர் மு. வரதராசனார். M.A., M.O.L., Ph.D., அவர்களுக்கும், இவண் அமர்ந்துள்ள அருட்டிரு மெய்ஞ்ஞான முனிவர்களுக்கும், இப் பத்துப்பாட்டு மாநாட்டில் நமக்குக் கலை விருந்தளிக்க முன் வந்துள்ள பத்து மாபெரும் புலவர்களுக்கும், இங்கு குழுமியுள்ள தாய்மார்கள், மாணவ மாணவிகள், பல்கலைப் புலவர்கள், தமிழர்கள், தமிழன்பர்கள், ஆசிரியர்கள் எல்லோருக்கும் எனது அன்பார்ந்த வணக்கம். இம் மாநாட்டுக்குச் சிறந்த புலவர்களைத் திரட்டி, அவர்களுடைய ஆராய்ச்சி நிரம்பிய கருத்துக்களைத் தனி நூலாக அமைத்து வெளியிட்டுள்ள நெல்லை சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாருக்கும், பல்லாண்டுகளாய் இக்கழகத்தின் ஆட்சியாளர்களாய், நூற்றுக் கணக்கான தமிழ் நூல்களை, உயரிய முறையில் அச்சிட்டு, பண்டைத் தமிழ் இலக்கியங்களைப் பாதுகாத்து மெய்ந்நெறி விளக்குவதே தமது வாணாள் குறிக்கோளாய் உழைத்து வந்த திரு வ. திருவரங்கம் பிள்ளையவர்களுக்கும், அவர்களின் உடன் பிறந்தார், திரு வ. சுப்பையா பிள்ளையவர்களுக்கும், கடந்த ஐந்து நாட்களாகத் தமிழ்ப்பாலையும் தேனையும் கலந்து தெவிட்டாத திரு அமுதை யளித்து, நெல்லைவாணரையும் நெல்லையின் சிறப்பையும் ஊக்கிவரும் அருணகிரி இசைக் கழகத்தாருக்கும் அன்பார்ந்த நன்றியும் வணக்கமும் உரித்தாகுக. இவ் ஆண்டில் அருணகிரி கழகத்தார் புதியதோர் நிகழ்ச்சியை நடாத்திக் காட்டுகின்றனர். ஒன்று மூன்றாகி, ஐந்தாகி, ஏழாகி, சீருடை ஏழு நாட்களிலும் தமிழ் விருந்தளிக்கின்றனர். இவ்வுலகில் எங்கும் கிழமை ஏழு; கிழமையின் வரிசையும் ஒன்றே. பத்துப் பாட்டில் ஒன்றாகிய பொருநர் ஆற்றுப்படையில், "பால் புரை புரவி நால்குடன் பூட்டிக் காலின் ஏழடிப் பின் சென்று" என்னும் சொற்களிற் குறித்தபடி விருந்தினரை வழியனுப்பும்

பொழுது, அவர்களுடன் ஏழடி புறத்தே சென்று செலவு பெற்றுத் திரும்புவது தமிழ்நாட்டு மரபு என்பது விளங்கு கின்றது. நமது நாட்டில் பல்லாயிரம் ஆண்டுகளாக ஏழு கன்னி மார், ஏழிசை வணக்கம் (மொகஞ்சதாரோ காலத்திற்கு முன்ன ரிருந்தே) பரவியிருந்ததென்றும், ஏழிசைக்கும், ஏழுநெட்டுயி ரெழுத்துக்களுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டென்றும் பல அரங்கங்களிலும், வெளியீடுகளிலும், எடுத்துரைத்து வந்துள் ளேன்.

இன்று பத்துப்பாட்டும் இதற்கு ஒரு சான்றாக விளங்கு கின்றது. அருணகிரி கழகத்தார் ஏழு கிழமைகளுக்கும் இயல் இசை நாடகவிருந்தளித்து 'என்றுமுள செந்தமிழ்' என்பதை உலகெங்கும் பரப்புகின்றனர்.

இனி, தமிழ் நாட்டிலேயே சிறந்தவர்களாகப் பத்து மாபெரும் புலவர்கள் பத்துப்பாட்டையும் பற்றிப் பேருரை வழங்க இருப்பதால், என் சிற்றறிவிற்கெட்டிய பொதுப் படை யான இரண்டொரு சமயக் குறிப்புக்களையும், மருத்துவக் குறிப்புகள் ஒரு சிலவற்றையும் பற்றிப் பேசவிழைகின்றேன்.

பத்துப்பாட்டு என்னும் நூல் சங்க இலக்கியங்களில் மிகத் தொன்மையானதும் பெருஞ் சிறப்புக்குரியதுமான தூய தமிழ் நூல். பழந்தமிழரின் பல்கலைத் திறமையையும் உயரிய சமயப் பண்பாட்டையும் எடுத்துக்காட்டும் கலங்கரை விளக்கமென்று கூறுவது மிகையாகாது. தமிழ் நாட்டின் பண்டைய வரலாற்றை உறுதிப்படுத்துவதற்கு உறுதுணையாய் நிற்பது. இப் பத்துப் பாட்டில் ஆற்றுப்படை ஐந்தும், அகப்பொருட்பாட்டு நான்கும், புறப்பாட்டு ஒன்றுமாகப் பத்தாகும். ஆற்றுப்படை என்பது ஆற்றுப்படுத்துதல். இறைவனிடம் அருள்பெற்ற ஒருவர் அவ் அருளுக்குத் தகைமையுடைய மற்றொருவரை இறைவன் முன் னிறுத்தி அறிமுகப்படுத்தி அவரையும் ஆட்கொள்ளச் செய்தல். ஆற்றுப் படைகளைப்பற்றிப் பின்னர் விரிவாகக் கூறுகின்றேன்.

## க. மருத்துவக் குறிப்புக்கள்

இப்பத்துப்பாட்டில் மருத்துவக் குறிப்புக்கள் மலிந்துள்ளன. இங்கு ஒன்றிரண்டைச் சுட்டிக் காட்ட அவாவுகின்றேன். பத்துப்பாட்டில், (கறி)—மிளகைப்பற்றி, எவ்வாறு கூறப்பட் டுள்ளதென்பதை நோக்குவோம். திருமுருகாற்றுப்படை, பத்துப் பாட்டில் தலைசிறந்து விளங்குவது; இது நக்கீரரால் முருகப் பெருமான் மேல் பாடப்பெற்றதென்பதை அறியாதார் தமிழுல கில் இல்லை. இதில் ஆறாவது படைவீடாகக் கருதப்படும் பழ முதிர்சோலையைச் சொல்லோவியத்தால் வரைந்து காட்டிய

நக்கீரனர் ‘கறிக்கொடிக் கருந்துணர் சாயப் பொறிப்புற, மடநடை மஞ்ஞை பலவுடன் வெரீஇ” என்று கூறி, மிளகுக்கொடிகளி லுள்ள கொத்துக்கள் அங்குமிங்கும் சாய்வதும், மயில்கள் பயந்து வெருண்டு திரிவதும், அழகாய் அமைத்துக் காட்டு கின்றனர். சிறுபாணுற்றுப் படையில் “பைங்கறி நிவந்த பலவின் நீழல் மஞ்சள் மெல்லிலை மயிர்ப்புறந் தைவர” என்று பலா மரத் தின் நிழலிலே பசிய மிளகுக்கொடி படர்ந்திருப்பதை இயற்கை வனப்போடு சுட்டுகின்றனர்.

‘காலின் வந்த கருங்கறி மூடையும்’ என்பது பட்டினப் பாலை, மதுரைக் காஞ்சியில், ‘இஞ்சி, மஞ்சள், பைங்கறி பிறவும் பல் வேறு தாரமொடு கல்அகத்து ஈண்டி’ இஞ்சியும் மஞ்சளும், பசுமையான மிளகும் குவியல் குவியலாகக் கிடப்பதைக் காட்டு கின்றனர். அகநானூறு புறநானூறு, சிலப்பதிகாரம், குறுந் தொகை முதலிய நூல்களில் ‘கறி’ என்னுஞ்சொல், மிளகைக் குறிக்கின்றதைப் பல இடங்களிற் காண்கின்றோம்.

பெரும்பாணுற்றுப் படையில் ‘சேதா நறுமோர் வெண்ணெ யின் மாதுளத்து, உருப்புறு பசுங்காய்ப் போழொடு கறிகலந்து கஞ்சுக நறுமுறி, யளைஇ’ என்று கூறுவதில் எத்தனை நயம். சிவந்த பசுவினது நல்ல மோரிலிருந்து எடுத்த வெண்ணெயில், மாதுளங்காய், பிஞ்சைப் பிளந்து, மிளகுப் பொடியொடும், கஞ்சுகம் (அதிகமதுரம், கருவேம்பு Liquorice) தளிரொடும் கலந்து வேகவைத்து உண்ணுவது குறிக்கப்பட்டுள்ளது. இவ் வண்ணமாக மிளகு பசுமோர் பசுவெண்ணெய், மாதுளம் பிஞ்சு, அதிமதுரம், இஞ்சி, மஞ்சள் முதலிய பொருட்களின் குணத்தை மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே பண்டைத் தமிழர் கண்டு பயன்படுத்தி வந்தனர். ‘குப்பை வேளை உப்பிலிவெந்ததை’ என்று வேளைக்கீரையின் (தைவேளை என்று இப்பொழுது அழைக்கப்படுகிறது) பெருமையும் கூறப்பட்டுள்ளது. (சிறு பாண்.)

நெடுநல்வாடையில், சந்தனக்கட்டையிலே நெருப்புண்டாக்கி மகளிர் அகிலையும், கண்ட சருக்கரையும் சேர்த்துத் தூவி இதன் புகையைக் காட்டி, கூந்தலை உலர்த்துவதும் எத்தனை மருத்துவக் கருத்துக்கள் அடங்கியுள்ளன! இந்தப் புகையில் கூந்தலுக்கு நறுமணம் ஏற்படுவதுமன்றி, மண்டையில் வரக்கூடிய ஊரல் சிரங்குகளுக்கும், ஈர், பேன் முதலியவைகளை அறவே ஒழிப்ப தற்கும் தக்க மருந்தல்லவா!

இத்தகைய பண்டைய இலக்கியங்களை நாம் கை நழுவ விடலாமா? ஒவ்வொரு இல்லத்திலும் இதைப் படித்துப் படித்து

வழக்கத்துக்குக் கொண்டுவரவேண்டாமா? இக்காலத்தில் நமது நாட்டில் விளையும் மிளகைப் பயன்படுத்துவதை விட்டு, அயல் நாட்டிலிருந்து கொண்டுவரப்பட்ட கொடிய மிளகாயைக் குழந்தைகளுக்கும் மிகுதியாகப் பயன்படுத்தி, வயிற்றளைச்சல், (Dysentery) கல்லீரல் கட்டி (Cirrhosis of Liver), சிறு நீர் அடைத்து உடல் வீங்குதல் (Nephritis) முதலிய நோய்களில் எவ்வளவு பேர்கள் மாண்டு வருகின்றனர். பண்டையோர் முறையைப் பின்பற்றுவோமாக. நமது நாட்டில், உண்டி சமைத்தல் ஒரு தனிக்கலையாயிருந்தது. சுவையில் அறுசுவை, உணவில் அரிசி, ஊறுகாய், வத்தல், சுண்டைக்கறி, காய்கறிகளை ஏற்றவாறு பச்சையாயும், அவித்தும் சுட்டும் பொறித்தும் கறி சமைத்தல், கிழங்குகளைப் பண்டமாக்குதல், இவையெல்லாம் உண்டி சமைப்பதிலும் நம் முன்னோர் மிகத் தேர்ச்சிபெற்றிருந்தனர் என்பதை விளக்குகின்றதல்லவா! உணவுக்குப் புழுங்கல் அரிசியைச் சமைப்பதனின்றே நம் முன்னோரது நுழைபுலம் வெளியாகின்றது. இன்று உலக மருத்துவர்கள் ஒருங்கேகூடி, புழுங்கல் அரிசியே, பச்சரிசியைவிட மேம்பட்டதென்று உறுதிபடுத்தியுள்ளனரே! புழுங்கல் அரிசியிலிருந்துதான் கஞ்சித் தண்ணீர் இரவில் இட்டு பாகப்படுத்திய பழைய சோறு கிடைக்கும். வெப்பம் மிகுந்த நம் நாட்டுக்குப் பழைய சோறு இன்றியமையாத தென்பதை நம் முன்னோர் அனுபவத்திற் கண்டனர். கோதுமையைவிட அரிசி கெடுதி என்று கூறுபவரிடம், கோதுமையிலிருந்து பழைய சோறு உண்டாக்கமுடியுமா என்று கேட்கவேண்டும். பல் விளக்குதல், பழைய சோறு ஆக்குதல், எண்ணெய் தேய்த்துக்குளித்தல், பல தானியங்களை உணவோடு உபயோகித்தல், பண்ணியங்கள் ஆக்குதல், மோர் சாப்பிடுதல், நோன்பிருத்தல், ஊறுகாய் வற்றல் முதலியன போடுதல், காய்கறி கீரை இஞ்சி, வெற்றிலை, வேம்பு, மிளகு நெல்லிக்காய் பயன்படுத்துதல், புலால் உண்ணாமை, எச்சி விலக்குதல், இவையனைத்தும் பண்டைத் தமிழர் கண்ட முறை. இதை இனியாவது கடைப்பிடிப்போமாக.

## உ. உடல்நலக் குறிப்பு

"மதுரைக்காஞ்சியில்" மதுரைமாநகரில் இரவு, நான்காம் சாமத்திலே நடக்கும் நிகழ்ச்சியைச் சித்திரித்துக்காட்டும் மாங்குடிமருதனர் "பல்வேறு பண்ணியக்கடைமெழுக்கு உறுப்ப" என்று கூறி, 3000 ஆண்டுகளுக்கு முன்னரேயே தமிழ்நாட்டில், ஒவ்வொரு இல்லத்திலும், பெண்டிர், முன்னரே எழுந்து பசுவினது சாணத்தினல் மெழுகினர் என்பது தெளிவு. ஆப்பி அல்லது பசுவின் சாணத்தைக்கொண்டு வீடுகள், கடைகளை மெழுகும்

பழக்கம் எங்கும் பரவியிருந்தது. இவ்விதமாய் மெழுகுதலைப் பற்றிச் சங்க இலக்கியங்களில் பல இடங்களிற் காண்கின்றோம்.

மணிவாசகப் பெருமானார், "கோமான் திருக்கோயில் தூகேன், மெழுகேன் கூத்தாடேன்" என்று கூறினாரல்லவா? திருநாவுக்கரசு நாயனாருடைய குறிக்கோளே உழவாரப் படை தாங்கி திருக்கோயில்களைப் பெருக்கி மெழுகித் தூய்மைப்படுத்து வதுதானே.

இங்ஙனம் மெழுகுவதனால், சாணத்திலுள்ள Becterio-Phage என்னும் நுண்ணிய பொருள் பலவிதக் கிருமிகளைக் கொன்றுவிடுகிறதென்று இன்று மருத்துவர்கள் கண்டார்கள். சாணத்தால் மெழுகிய வீடுகளில் பிளேக் (Plague) நோய்க்குக்காரணமான பூச்சிகள் மாண்டுவிடுகின்றன என்று இன்று காண்கிறோம்.

இம்மாதிரியே, உடல் நலத்துக்கு வேண்டிய விழுமிய குறிப்புக்கள் மருத்துவக் கருத்துக்கள், பத்துப்பாட்டிலும் மற்றைய சங்க இலக்கியங்களிலும் நிரம்பியிருக்கின்றன. எனக்குக் கொடுத்த கால அளவினுள், இரண்டொரு சிறப்பான இடங்களை மாத்திரம் எடுத்துக் காட்டியுள்ளேன்.

## ௩. முன்னோர் கடவுட் கோள்கை

இனி, நம் முன்னோர், வருந்துயரந்தீர்க்கும் மருந்தாகிய பரம்பொருளை எவ்வண்ணம் வழிபட்டு உணர்ந்தனரென்பது சங்க இலக்கியங்களில் ஆங்காங்கு காணலாம். மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே பண்டைத் தமிழரது கடவுட் கொள்கை எவ்வண்ணம்அமைந்திருந்ததென்பதைப் பத்துப்பாட்டைக் கசடறக் கற்பவர் நன்குணர்வர். இதுதான் பத்துப்பாட்டின் திரண்ட பொருளாக யான் கருதுகின்றேன். "பத்திவலையிற் படுவோன் காண்க" என்னும் திருவாக்குப்படி ஆண்டவன் பக்குவமடைந்த உயிர்களுக்குத் தானே முன்வந்து வீடுபேறு அளிப்பன். ஒரு பகுதியார்க்கு, மெய்ஞானத்தை மறைத்திருக்கும் மலத்தை நீக்கி உள் நின்றே உணர்த்துவன் (தன்மை) ஒருசிலர்க்கு நேரே (முன்னிலை) தோன்றி அருள் கொடுப்பன். மற்றொரு பகுதியார்க்கு, அருட்குருவாய் வந்து மறைகளை ஓதி ஆட்கொள்வன் (படர்க்கை). இங்ஙனமே தமிழ் இலக்கணத்திலும் தன்மை, முன்னிலை, படர்க்கையென்று மூன்று இடங்கள் வந்தனபோலும் நிற்க.

எட்டுத்தொகையில் ஒன்றாகிய பரிபாடலுக்குப் பரிபாட்டென்னும்பெயருமுண்டு. இந்தப்பாட்டை, பத்துப்பாட்டோடே

தொகுக்காது, வேறு பத்துப்பாட்டுக்களை ஒன்ருய்த் தொகுத்து பத்துப்பாட்டென்று பெயரிட்டழைப்பதற்குக் காரணம் ஆராய்தற்குரியது. தமிழிலே, பெருஞ் சிறப்புவாய்ந்த சொற்களில் "இறை" என்னும் சொல் ஒன்ருகும். இச்சொல்லுக்கு, கணவன் தமையன், அரசன், உயர்ந்தோன், கடவுள் என்னும் பல பொருள்கள் உண்டு. இச்சொல்லின் பொருள் வளர்ச்சியினின்றே, நம் முன்னோரது சமயக் கோட்பாட்டை ஊகித்தறியலாம். யாதாமொரு நிகழ்ச்சி எதிர்பாராது நடந்தேறுமாயின், அஃது இறைவனுல் ஆயது என்னும் கருத்து தமிழ் நாட்டில் இன்றும் நிலவுகின்றது. பண்டை இலக்கியங்களில் தலைவன் தலைவி என்னும் சொற்களினின்றே இருவரும் ஒத்த பெருமையுடையவர்களாகத் திகழ்ந்தனர் என்பது அறியக்கிடக்கின்றது. ஆயினும் இல்லறம் ஒழுங்குபெற நடப்பதற்கு, குடும்பத்திற்கு முதன்மையாயுள்ளவன் ஒருவன் என்பதைச் சுட்டுவதற்காகவே, தலைவனைக் கணவன் என்றழைத்ததுமன்றி, 'இறை' என்னும் பெயரும் அவனுக்கு வழங்கப்பட்டு வந்தது (நப்பின்னை தனக்கிறை) என்ருற்போல. தலைவிக்கு 'இல்லாள்' என்னும் திருப்பெயரிட்டு, அகத்தில் நடக்கும் செயல்களுக்கு அவளைத் தலைவியாகவும், புறத்தில் நடப்பவற்றிற்குக் கணவனைத் தலைவனுகவும் கொண்டு இருவரும் இல்லறச் சகடத்தை ஒரே மனத்துடன் செவ்வனே நடத்தினர். ஒவ்வொரு இல்லமும் நாட்டின் அடிப்படையான பாகமாகும் (unit). பல இல்லங்கள் நிறைந்தது நாடு, அதை ஆளுபவன் அரசன்; அவனுக்கும் 'இறை' என்னும் பெயர் வழங்கலாயிற்று. இத்தகைய அரசர்களுக்கெல்லாம் தனி அரசன் ஒருவன். அவன் தான் ஆண்டவன்; "ஒருவன் என்னும் ஒருவன் காண்க" என்றபடி ஒப்புயர்வற்றவன்; அவனே எல்லாம் வல்ல இறைவன். ஆகவே இறை யென்னும் சொல் ஒவ்வொரு இல்லத்திலும் தலைவனுக்கும், ஒவ்வொரு நாட்டிலும் அரசனுக்கும், இறுதியில் தனித்து நிற்கும் பேராற்றலுடைய கடவுளுக்கும் பெயரிட்டழைத்தனர் என்பது தெளிவு. இத்தகைய ஒழுக்கமுறையை மனதிற்பதித்துப் பத்துப்பாட்டில் ஊடுருவிச்செல்லும் கடவுட்கொள்கையை உற்றுநோக்குவோமாயின் அதினின்றும் விலைமதியாச் செம்பொருள் விளங்கும். ஓர் சிறந்த அரசரிடம் அவரது நன்மதிப்புக்குரிய பத்திக் கலைச்செல்வன் பரிசு பெற்ருன். தம்மைப் போன்ற கலைவாணரை அவ்வரசனிடம் முன்னிலைப்படுத்தி "யான் பெற்ற பரிசை நீயும் பெறுவாயாக" என்று கூறுவதை இந்நூலிற் காண்கின்ருேம். இங்ஙனமே திருமுருகாற்றுப்படையில் முருகன் அருள்பெற்ற புலவர் ஒருவர், மற்ருெரு புலவரை முருகன் சந்நிதானத்தில் நிறுத்திப் புலவரது தன்மையை முருகனுக்கும் முருகனது பெரும்புகழைப் புலவருக்கும் அறிமுகப்படுத்தி

"வேண்டிய வேண்டியாங்கெய்துவர்; செம்மல் உள்ளமோடு நீ பரிந்து கேள், உடனே பெறுவாய்" என்று ஆற்றுப்படுத்துவது தான் திருமுருகாற்றுப்படை. பத்துப்பாட்டில் மற்றைய ஆற்றுப்படைகளில் அரசனைப் புகழ்ந்து பாடியது, என்னையெனின்? கலைஞானத்திலும், இறைபணி நிற்றலிலும் மிகச் சிறந்த அரசன் அங்கு மறைமுகமாய்த் திருமுருகனையே சுட்டி நிற்கின்றான். இதற்குச் சான்றாக ஆற்றுப்படையிற் பாடப்பட்ட அரசர்கள் முருகனிடம் நிரம்பிய பத்தியுடையவர்களென்பது பத்துப்பாட்டினின்று விளங்கும்.

இத்தகைய முருகன் துதி நிரம்பிய பாடல்களே ஆற்றுப்படைகள் ஐந்துமாகும். இன்னும் மற்றைய பாட்டுக்களில், அகத்துறைப் பொருளுக்கிணங்கத் தலைவிக்குத் தலைவன் பற்றுக்கோடாயிருப்பதுபோல, உயிருக்கு ஆண்டவன் தலைமையாய் இருந்து, உயிருடன் சேர்ந்து, உயிரை ஆட்படுத்திக்கொள்கிறான் என்று உணரற்பாலது. மாட்சிமை தங்கிய இறைவன் உயிர்கள் மாட்டுவைத்த கருணையினால், அவன் ஒருவனேயாயினும் (ஒருவனே தெய்வம்), பல தோற்றங்கள் கொண்டு, பல் தொழில் புரிகின்றான் என்று கண்டு, இத் தொழிற் குறித்து பல்வேறு நாயன்மார்களாகத் திருக்கோயில்களில் காட்சி யளிக்கின்றன னென்று கொண்டனர்; உயிர்கள் பக்குவமடைந்ததும், இறைவன் அருட் குருவாய்த் தோன்றி, (கை தொழூஉப் பரவிக்காலுற வணங்குவார்க்கு), வீடுபேறளிக்கின்றான் என்பதே ஆற்றுப்படையின் உயிர்நாடியாகும். பத்துப்பாட்டில் அடங்கிய ஐந்து ஆற்றுப்படைகளிலும், புலவன், பொருநன், பாணன், கூத்தன் என்று பல்கலைப் பெயர்களைக்கொண்டு, பல அரசர்களைப் பாடியதாயிருந்தபோதிலும், இவை இவ்வரசர்களுக்கு அரசனாகிய முருகப்பெருமானையே மறைமுகமாய்ச் சுட்டிக்குறிக்கும். இதே கருத்திற்றான் முருகனை, 'புலவர்ஏறே பெரும்பெயர்முருக' என்றும், ('திருமுருகாற்றுப்படை') 'போர் மிகு பொருந' (மதுரைக்காஞ்சி), 'கொற்றவை சிறுவ' (நெடுநல் வாடை), 'மலைமகள் மகனே' (மலைபடுகடாம்), 'குழலன் கோட்டன், இசைபேர் ஆள' (பாணாற்றுப் படைகள்) என்று இவைகளின் உள்ளீடாயுள்ள பொருள்களால், முருகனைத் துதித்தனர். அகப்பாட்டுக்களில், அகவழிபாடு சுட்டப்பட்டுள்ளது. ஆகவே, பண்டைத் தமிழர் சமய வழிபாடு முழுவதும், இப் பத்துப்பாட்டில் அமைந்துள்ளதென்று கருதுவதற்கிடமுண்டென்று மாத்திரம் இங்குக் கூறுகின்றேன்.

பத்துப்பாட்டில் ஆராய்ச்சிக்குரிய பொருட்கள் பலவுள. திருமுருகாற்றுப் படையா அல்லது புலவராற்றுப் படையா?

திருவேரகம் என்னும் திருப் பெயர்பெற்ற ஊர் எது? அதிற் கூறப்படும் 'ஆறெழுத்து' எது? திருச்சீரலைவாயில் செவ்வேள் முருகப் பெருமானின் திருக்கை பன்னிரண்டிலும் உள்ள ஆயுதங்களின் தொழில் என்னை? அவை தனித்தும், இசைந்தும் இயங்குமா? திருஆவினன்குடியில், பதினொரு மூவராகிய மூப்பத்துமூவர் யாவர்? முருகனுக்கும் முக்கண்ணனுக்கும் என்ன தொடர்பு? கூத்தராற்றுப்படை என்னும் பெயர் முந்தியதா; மலைபடுகடாம் முந்தியதா? கந்தழி என்பதற்கு உண்மைப் பொருள் என்னை? நக்கீரரின் குலம் என்னை? நச்சினார்க்கினியரின் பத்துப் பாட்டுரையில் எவை பொருத்தமில்லாதவை? பத்துப் பாட்டிலிருந்து, தமிழ் நாட்டுக்கும் மற்றைய நாடுகளுக்கும் வாணிபம் எங்ஙனம் நடந்தது? இங்ஙனமாக, இசைக் கருத்துக்கள், வானநூற் குறிப்புக்கள், சிற்பத்தின் அக்கால நிலை, அந்தணர் மரபு, பாண்டியனது வேப்பமாலை குறிக்கப்படுதல், மகளிர் விளக்கேற்றி வழிபடுதல், தலைவனுக்கும் தலைவிக்கும் மெய்யுறு புணர்ச்சி ஏற்படுங்காலம், கோயில் வழிபாடு, வேள்வியின் இலக்கணம், பத்துப்பாட்டிலுள்ள கடவுட் பெயர், இடப்பெயர் மாற்றப்பட்டுள்ளவை, இவைபோன்ற பல ஆராய்ச்சிகளுக்கு இடமாய் இருப்பது பத்துப்பாட்டு.

### ௪. பத்துப்பாட்டிற் சில நயங்கள்

இன்னும், திருமுருகாற்றுப் படையில், முருகனது ஆறு படை வீடுகளும், ஆறு திருமுகங்களும் பன்னிரு ஆயுதங்களும் அவ் ஆயுதங்களின் தொழில்களும் முருகனுக்குரிய பல திருப்பெயர்களும், அவனைப் பரவுதலும் நிறைந்து ஒளிர்கின்றன. பொருநராற்றுப் படையில், யாழின் ஓசையில் கள்வரும் தங் கொடுஞ்செயலை மறந்தனர் என்று கூறுவது எத்தகைய விழுமிய பொருள்! பயித்தியம் பிடித்தவர்களுக்குச் செய்யும் மருத்துவ முறையில், நல்லிசையில் அவர்களை ஈடுபடுத்திக் குணப்படுத்துவதும் இன்று கையாளப்பட்டு வருகின்றதல்லவா? யாழ் என்னுஞ் சொல்லே, 'வயால்' ஆகி, 'வயலின்' ஆயிற்று என்று கூறுவது பொருத்தமல்லவா? பாணாற்றுப்படைகளில், இசையைப்பற்றிய குறிப்புகள் அளவிடமுடியாதனவாகும். பெரும்பாணாற்றுப்படையில், திருவெஃகா, காஞ்சி முதலிய ஊர்களின் சிறப்பும் திருமால் வணக்கமும் எடுத்தாளப்பட்டதல்லவா? இதில் 'ஏழின கிழவ' என்று கூறியது கரிகால் வளவனையா அல்லது அவனை ஆட்கொண்ட சிவமுருகப் பெருமானையா? சிறுபாணாற்றுப்படையில், "ஆல்அமர் செல்வற்கு அமர்ந்தனன் கொடுத்த ஆய்" என்று கூறியபடி ஆலின் கீழிருக்கும் தென் முகக்கடவுளை 3000 ஆண்டுகளுக்கு முன்னரேயே மக்கள் வழிபட்டு

வந்தது தமிழ் நாடல்லவா? வேலூரின் சிறப்பும் ஆமூரின் பெருமையும் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முந்தியதல்லவா? "தாழை முடித்துத் தருப்பைவேய்ந்த குறியிறைக் குரம்பை" என்றபடி தருப்பப் புல்லாலே வேயப்பட்ட இறப்பையுடைய குடிலையாயின் அதன் பெருமைதான் என்னே?

"தீப்பட மலர்ந்த கடவுள் ஒள்பூ அடைதல் ஓம்பி"— கடவுள் சூடுதற்குரிய அழகிய தாமரை என்பதில் எத்தகைய ஆழ்ந்த சமயக் கருத்து அடங்கியுள்ளது! முல்லைப்பாட்டில் "கற்றோய்த்து உடுத்த வடிவப் பார்ப்பான் முக்கோல் அசைநிலை கடுப்ப"—காவிக்கல்லைத் தோய்த்ததுகில் (துணி) அணிந்து நோன்புகாக்கும் அந்தணன் என்பதிலிருந்து காவித்துகிலின் பெருமை தமிழ்நாட்டிற்குரியதென்பது வெளியாகின்றதல்லவா? மதுரைக் காஞ்சியில் "பெரியோர் சென்ற அடிவழிப் பிழையாது குடமுதல் தோன்றிய தொன்று தொழு பிறையில்" என்று மேற்றிசையில் தோன்றிய பிறை (சந்திரன்) தொழுவது அக்காலத்து மக்களது ஒழுக்கந்தானே! "நீருநிலனும் தீயும் வளியும் ஆக விசும்போடு ஐந்துடனியற்றிய மழுவாள் நெடியோன் தலைவனாக"—என்றும், திருக்கோயில்களிலுள்ள நாயன்மார், வானுறை தெய்வங்களென்றும் எத்தனை பேரழகாய் எடுத்துரைக்கப்பட்டுள்ளது! மழுவேந்திய சிவபிரானே தெய்வங்களின் முதல்வனாகக் கொள்ளப்பட்டதும் தெளிவல்லவா! "கணம் கொள் அவுணர் கடந்த பொலம் தார்மாயோன் மேய ஓணம் நல்நாள்" என்று மாயோனது பிறந்த நாளாகிய திருவோணத் திருவிழா நடத்தியது அறிந்து மனமார மகிழ்கின்றோமல்லவா. நிலையாமையைப்பற்றிய குறிப்புக்கள், மதுரைக் காஞ்சியில் எத்தகைய பொருண்மை வாய்ந்துள்ளன! நெடுநல்வாடையும் நக்கீரரால் யாக்கப்பட்ட பெருமை பெற்றதல்லவா! இதில், வலம்புரிச்சங்கின் சிறப்பும், திங்களும் உரோகிணியும் நீங்காது உறையும் வானநூற்குறிப்பும், இல்லுறை தெய்வ வணக்கமும், திருவிளக்கேற்றி நெல்லும் மலரும்தூவி, மகளிர் தூய உள்ளமோடு வழிபடுங் காட்சியும் நினைத்தாலும் உள்ளத்தை உருக்கும் இயல்புடையதாயிற்றே! குறிஞ்சிப் பாட்டில் பொலிந்துள்ள அகத்துறைப் பொருட்களை முன்னுவதே இன்பந் தருவதாயுள்ளதே. இப்பாட்டிற் கூறிய, தொண்ணூற்றொன்பது பூக்களையும் அமைத்து பெருநிலக் கிழவர் ஒருவர், பூங்கா (Park) அமைத்தனராயின் அங்கு முருகப்பெருமானே, வந்து உறைவரல்லவா! பட்டினப்பாலையிலும், மற்றையபாட்டுகளிலும், 'பலர் தொழுதெய்வம்' என்று கூறியதும், சேயோன், முருகன், முக்கண்ணன் கோயில்களும் அமணப் பௌத்தபள்ளி

களும், இல்லுறை தெய்வம், காடுறை தெய்வம் என்றெல்லாம், மக்கள் தத்தமக்கு நம்பிக்கையுள்ள தெய்வங்களை வழிபட்டனர் என்பது வெளிப்படையல்லவா! பட்டினம் என்று குறித்த, குலசேகரன்பட்டினம், கொற்கைப்பட்டினம், நாகப்பட்டினம், சென்னப்பட்டினம், விசாகப்பட்டினம், மசூலிப்பட்டினம், என்னும் ஊர்களின் பெயர்கள், அறியாமையால், பட்டனம் என்று மனம்போனவாறு மாற்றப்படாமலிருந்தால், இவை எல்லாம் தனித்தமிழ்ப் பெயர்கள் என்பது எவ்வளவு தெளிவாய்த் திகழ்ந்து ஒளிரும்! கடற்கரை ஒட்டிய ஊர்களுக்கு, கோடம் பாக்கம், மீனம்பாக்கம் என்னும் பாக்கப் பெயர்கள் ஆதியில் தனித் தமிழ்ப் பெயர்களென்று கூறித் தமிழைத் தலைகாத்துக் கொண்டிருக்கின்றன போலும். மலைபடுகடாத்தில், "மருதம் பண்ணிய கருங்கோட்டுச் சீறியாழ், நரம்பு மீதிறவாதுடன் புணர்ந்து ஒன்றி விறலியர்" என்றபடி மெல்லிய யாழின் ஓசைக்கு மேற்போகாமல் மகளிர் ஆடலும் பாடலும் பண்ணும் ஒருங்கே சேர்ந்து நிகழுமாயின் அக்காலத்து கூத்து, இசைக் கலைகளின் சிறப்புத்தான் என்னே! திருமுருகாற்றுப் படையில் "மலைகிழவோனே" என்றும், மலைபடுகடாத்தில், 'நாடுகிழவோனே' என்றும் அறுதியிட்டுக் கூறியது எத்தனை பேரழகு வாய்ந்தது!!!

இங்கு, குழுமிய பெரியோரனைவருக்கும் அவர்களது அடி பணிந்த வேண்டுகோள், சங்க இலக்கியங்களைக் கற்பது கடினமென்றாவது அல்லது வேறு காரணத்தை யிட்டாவது கற்காம லிருப்பது பெருந்தவறு என்பது அடியேனது பட்டறிவு (அனுபவம்). பத்துப்பாட்டைப் படியாத தமிழர், பெருங்கலைச் செல்வத்தை யிழந்தவர்களென்றே எண்ண இடந்தருகிறது. பத்துப் பாட்டு புலவர்கள் மாத்திரந்தான் படிப்பதற்குரிமை என்று நாம் எண்ணுவது பொருந்தாது. இன்றே தமிழர்களும் தமிழன்பர்களும், பத்துப்பாட்டைப் படிக்கத் தொடங்கவேணுமென்று மன்றாடிக் கேட்டுக்கொண்டு, இங்கு நம்முடன் கலந்து கொள்ளும் பத்துப்பெரும்புலவர்களுக்கும், சீரிய தலைவர்களுக்கும், என் பேராலும் தங்கள் பேராலும் நல்வாழ்த்துக் கூறித் தங்களது உள்ளங்கனிந்த அன்புடனே, தங்களில் ஒருவனாய் இம்மாநாட்டில் கலந்துகொள்ளும் பெரும்பேற்றையளித்த சிவமுருகன் கருணைத்திறத்தை இறைஞ்சி, இம்மாநாட்டைத் தொடங்கி வைக்க முன்வருகிறேன். வாழிய செந்தமிழ்—முருகா வருக.

# பத்துப் பாட்டு

[வித்துவான், திரு. கோ. சுப்பிரமணிய பிள்ளை, எம். ஏ., பி. எல்.]

நான் சிறுவனாயிருந்தபொழுது ஆங்கில இலக்கிய நூல்களை விழுந்து விழுந்து படித்துக்கொண்டிருந்தேன். அவற்றில் எங்கேனும் சுவையான பகுதி தென்பட்டால், இதுபோல் நம் தமிழ் நூல்களிற் படிக்கக் கிடைக்குமா என்று எண்ணுவதுண்டு. அவ்வாறு படித்த நூல்களில் ஒன்று, சர் வால்டர் ஸ்காட் (Sir Walter Scott) என்பவர் பாடிய 'குளத்தின் காரிகை' (Lady of the Lake) என்னும் கதை. அதில் ஓரிடத்தில் போர்க்களம் வருணிக்கப்படுகையில், போரில் மடிந்த வீரர் உடல்களின் இழிந்த நிலையும், அவை உயிருடன் வாழ்ந்த காலத்திருந்த உயர்நிலையும் வேறுபாடுதோன்ற உடன் கூறப்படும். இரும்புச்சங்கிலிகளை அறுத்தெறிந்த கைகள் புல்லாலே சூழ்ந்து விலங்கிட்டுக் கிடந்தனவாம். அச்சம் என்பதே அறியாத இதயம் துடித்துக்கொண்டிருந்த மார்புக்கூட்டிலே அஞ்சி ஒளிக்கும் குஞ்சிக் குருவிகள் கூடுகட்டி யிருந்தனவாம். ஓடியாடி உழைத்துவந்த கால் எலும்புகளின்மேல் மெல்ல மெல்ல அசைந்து ஊர்கின்ற புழுக்கள் அழுக்கினையிட்டு நகர்ந்தனவாம். இருப்புக்குல்லாயும் வீரக்கண்ணியும் அணிந்துவாழ்ந்த தலைவனின் தலையோட்டைச் செடி செத்தைகள் மூடிச் சிரிப்பன போன்றனவாம்.* இப்பகுதியைப் படித்ததும், இதுபோல் முரண் அணி (Contrast) தோன்றத் தமிழ்ப் புலவர்களால் பாட

---

*"It might have tamed a warrior's heart,
To view such mockery of his art!
The knot-grass fetter'd there the hand,
Which once could burst an iron band;
Beneath the broad and ample bone,
That buckler'd heart to fear unknown,
A feeble and a timorous guest,
The field-fare framed her lowly nest;
There the slow blind-worm left his slime
On the fleet limbs that mock'd at time;
And there, too, lay the leader's skull,
Still wreathed with chaplet, flush'd and full,
For heath-bell with her purple bloom,
Supplied the bonnet and the plume." (Canto III, stanza-V)

முடியுமா? என்று எண்ணினேன். பின்னர் ஒருநாள் பத்துப் பாட்டில் மதுரைக் காஞ்சியைப் படித்துக்கொண்டு இருந்த பொழுது இதுபோன்ற முரண் அணிகொண்ட பகுதியொன் றைப் படித்ததும் துள்ளிக்குதித்தேன். மகிழ்ச்சி பொங்கப் பொங்க மீண்டும் மீண்டும் படித்தேன். போரின் கொடுமை கண்டும் வருந்தினேன். மதுரைக்காஞ்சி குளத்துக் காரிகையை விடப் பன்மடங்கு மிஞ்சிவிட்டது. அப்பகுதி இதோ வரு மாறு:—

"உறுசெறுநர் புலம்புக்கவர்
கடிகாவி னிலைதொலைச்சி
யிழிபறியாப் பெருந்தண்பணை
குரூஉக்கொடிய வெரிமேய
நாடெனும்பேர் காடாக
ஆசேந்தவழி மாசேப்ப
ஊரிருந்தவழி பாழாக
இலங்குவளை மடமங்கையர்
துணங்கையஞ்சீர்த் தழூஉமறப்ப
அவையிருந்த பெரும்பொதியிற்
கவையடிக் கடுநோக்கத்துப்
பேய்மகளிர் பெயர்பாட
அணங்குவழங்கு மகலாங்கண்
நிலத்தாற்றுங் குழூஉப்புதவின்
அரந்தைப் பெண்டிர் இனைந்தனர் அகவக்
கொழும்பதிய குடி தேம்பிச்
செழுங்கேளிர் நிழல்சேர
நெடுநகர் வீழ்ந்த கரிகுதிர்ப் பள்ளிக்
குடுமிக் கூகை குராலொடு முரலக்
கழுநீர் பொவிந்த கண்ணகன் பொய்கைக்
களிறுமாய் செருந்தியொடு கண்பமன் றூர்தர
நல்லோர் நடந்த நகைசால் விளைவயற்
பன்மயிர்ப் பிணவொடு கேழல் உகள
வாழா மையின் வழிதவக் கெட்டுப்
பாழா யினநின் பகைவர் தேஎம்." (அடி. கருஉ-எகூ)

இது தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனோடு பொருதுபட்ட பகைவரின் நாடும் ஊரும் அடைந்த நிலை. பசிய நெடிய வயல்களை நெருப்புக்கொழுந்து விட்டெரிந்து உண்டதாம். நாடு காடாயிற்று. பசுத்திரள் தங்கிய இடத்திலே புலித்திரள் தங்கின. ஊராயிருந்தது பாழாய்க் கிடந்தது. எழில்வாய்ந்த இளமகளிர் வளையொலிப்

பத் துணங்கையும் குரவையும் ஆடின இடங்களிலும், சான்றோர் இருந்த அம்பலங்களிலும் பேய்க்கூட்டங்கள் கூத்தாடின. முன்பு விருந்தினரை ஏற்று மகிழ்ந்திருந்த வாயில்களிலே பெண்கள் தலைவிரி கோலமாய்க் கரைந்துருகி அழுதனர். வளமை கொழித்த இடங்களில் பசி கொதித்தது. குடிமக்கள் பதி பெயர்ந்தனர். வெந்து நொறுங்கிப்போன மாளிகைக் குதிரிடங்களிலே கூகையும் கோட்டானும் கூக்குரலிட்டன. செங்கழுநீர் மலர்ந்திருந்த பொய்கைகளைக் கோரைப்புற்கள் முளைத்துத் தூர்த்தன. எருது உழுத நிலங்களைப் பன்றி உழுதது. இப்படியாகப் பாழ்பட்டது பகைவர் நாடு. ஏறுக்கு மாறாக நிலைமாறிய தன்மை மேலேகண்ட அடிகளில் நன்கு சித்திரிக்கப்படுகிறது. இதுபோன்ற எழுத்தோவியங்களைப் பத்துப்பாட்டில் பலவாகக் காணலாம்.

பத்துப்பாட்டு என்னும் பெயரால் விளங்கும் நூல் பத்துப் பாடல்களைக் கொண்டது. அப்பாடல்களின் பெயர்களும் வைப்பு முறையும் பின்வரும் வெண்பாவால் அறியலாம் :—

"முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை
பெருகு வளமதுரைக் காஞ்சி—மருவினிய
கோலநெடு நல்வாடை கோல்குறிஞ்சி பட்டினப்
பாலை கடாத்தொடும் பத்து."

எண்மர் புலவர்கள் இவற்றைப் பாடினர். தொகுத் தோரும் தொகுப்பித்தோரும் யார் என்று தெரியவில்லை. நாம் செய்த புண்ணியத்தால் பத்துப்பாட்டு முழுமையும் சிதையாமல் நமக்குக் கிடைத்துள்ளன. நச்சினார்க்கினியர் பத்துப் பாடலுக்கும் உரை செய்திருக்கிறார். பாட்டு என்னும் இலக்கணத்துக்கு இயைய இப்பாடல்கள் யாக்கப்பட்டிருப்பதாலும், கொண்டு கூட்டுப் பொருள்கோளாற் பொருளை அறியவேண்டியிருப்பதாலும், நச்சினார்க்கினியர் உரை பெரிதும் உதவியாயிருக்கிறது.

பாட்டும் தொகையும் கீழ்க்கணக்கும் என்று உரையாசிரியரும் பிறரும் கூறுவதால், பத்துப்பாட்டின் முதன்மையும் சிறப்பும் தெரியவரும். இந்நூல்,

"ஆன்றோர் புகழ்ந்த வறிவினிற் றெரிந்து
சான்றோ ருரைத்த தண்டமிழ்த் தெரியல்
ஒருபது பாட்டும்"

என்று நச்சினார்க்கினியர் உரைச் சிறப்புப்பாயிரத்திற் புகழப் படுகிறது.

"அமிழ்தினிற் சிறந்த தமிழெனு மடந்தை
கந்தரத் தணிமணிக் கலனர சென்ன
உத்தமர் புகழுமிப் பத்துப் பாட்டும்."

என்று பிறராலும் போற்றப்படுகிறது.

நூற்றுக்கு மேலான அடிகளைக் கொண்டனவாய் மிகநீண்ட பாக்களாக நமக்கு முதன்முதல் கிடைக்கப்பெற்ற பழம்பாடல்கள் இப்பத்துப் பாட்டுக்களுமேயாகும். பின்னர் எழுந்த சிலப்பதிகாரம், மணிமேகலை, பெருங்கதை முதலிய சிறந்த காவியங்களுக்கு அடிகோலித் தோற்றுவாய் செய்ததுபோன்றனவும் எடுத்துக்காட்டாக விளங்கியனவும் பத்துப் பாட்டேயாகும் எனலாம். பண்டைத் தமிழர்களுடைய அருமை பெருமையும், நாகரிக வாழ்க்கையும், பண்பாட்டின் பான்மையும், அரசரின் ஆண்மையும் கொடையும் படையும், சமயக் கொள்கையும், ஆடியின் நிழல்போல் இந்நூலில் ஒளிரக் காணலாம். இப்பத்துப்பாட்டில் ஒன்றாகிய குறிஞ்சிப் பாட்டைக்கொண்டே கபிலர் பிரகத்தனுக்குத் தமிழை அறிவுறுத்தினர் என்றால், இந்நூலின் பெருமையை வேறு விளம்பவும் வேண்டுமோ?

இந்நூலில், ஒவ்வொரு பாட்டின் உரைக்குப் பின்னரும் ஒன்று அல்லது பல வெண்பாக்கள் காணப்படுகின்றன. அவை சுவைமிகுந்து பொருள் செறிந்தவை. அவற்றைப் படியாமல் விட்டுவிடலாகாது. மாதிரிக்கு ஒன்றைமட்டும் இங்கே காணலாம்:—

"சொல்லென்னும் பூம்போது தோற்றிப் பொருளென்னும்
நல்லிருந் தீந்தாது நாறுதலால்—மல்லிகையின்
வண்டார் கமழ்தாம மன்றே மலையாத
தண்டாரான் கூடற் றமிழ்."

இவ் வெண்பாக்கள் முத்தொள்ளாயிரப் பாக்கள்போன்று நயம் வாய்ந்தவை. தமிழை அறிய விரும்பும் ஒவ்வொருவரும் பத்துப்பாட்டைப் படிக்கவேண்டியது முதன்மையாகும்.

---

நேரிசைவெண்பா

தகவுடைய வேற்பெருமான் தண்ணருளால் நல்ல
அகமுடையார் கூடும் அருள்சேர்—புகழ்பத்துப்
பாட்டுமா நாடு பசுந்தமிழர் வாழ்கின்ற
நாட்டுக் கிசைவளர்க்க நன்கு.

கிருபானந்தவாரியார்.

# ஊக்க உரைகள்

"பாட்டிற்குச் சிறப்பிலக்கணமாகிய உணர்வூட்டும் ஆற்றலும் அறிவூட்டும் ஆற்றலும் பெற்று, பழந் தமிழர்களுடைய பல்வேறு வகைப்பட்ட வாழ்க்கை நிலைகளையும் படம்பிடித்துக் காட்டவல்ல பாட்டோவியம் என்று பத்துப்பாட்டினை மதிப்பிடுதல் குற்றம் அன்று. இப்பாட்டோவியங்கள் இலக்கிய உலகத்தில் ஈடு எடுப்பின்றித் திகழ்தற்குரிய மாணிக்க மலைகளாகும். இவைகள் மக்களாகப் பிறந்த எல்லார்க்கும் நல்அறிவு, நல்உணர்வு என்னும் மாணிக்கமணிகளைக் கொடுக்கும் பொதுவுடைமைகளாகுக என்று வாழ்த்துகிறேன்.

க. பெருமாள், எம். ஏ., மாநிலக்கல்லூரி, சென்னை.

ஆண்டவனருளாலும், தமிழன்னையின் திருவுளப் பாங்கினாலும், ஏனைய தலைவர், விரிவுரைப் பொழிவாளராதி புலவர் பெருமான்களது திறமையாலும் மாநாடு செவ்வனே நடைபெறுமெனவே நம்புகின்றேன்.

வித்துவான், எஸ். வி. நரசிம்மாச்சாரியார், இளையாங்குடி.

தமிழ்நாடும், தமிழ்மொழியும் தலைசிறந்து விளங்க நாளும் தொண்டாற்றும் தங்கள் கழகம் வாழ்க என வாழ்த்துகின்றேன்.

வித்துவான், வை. சு. தண்டபாணி, இராங்கியம்.

தாங்கள் தமிழுக்காகச் செய்யும் தொண்டுக்காக நன்றி செலுத்துகிறேன். மாநாடு வெற்றியாய் நடைபெற்றிருக்குமென நம்புகின்றேன். தாங்கள் நோயின்றி உடல் உரத்தோடு நெடுநாள் வாழவேண்டுமென வாழ்த்துகின்றேன்.

பண்டித, எஸ். எஸ். ஆனந்தம், சென்னை.

அறிவின் ஆற்றலையும் உணர்ச்சியின் வன்மையையும் பகுத்துப் பகுத்துப் பேரின்பம் காணும் பெருந்தமிழ்ப் பேராசிரியர் அவர்கள் தலைமையில் இதுவரை கூடாத பத்துப்பாட்டு மாநாடு தொடங்குவது நெல்வேலிக் கூடலின் நெடுந்தவப் பயனேயாம். சீரிய அறிஞர்களின் சிறப்பு மிக்கோங்கிய செந்தமிழ்ப் பாட்டின் செவ்விய சொற்பொழிவுகளைத் தாரணி தழைக்கத் தலைமை உரைகளைத் தேனினும் இனிதாய்த் தெளிவுடன் வழங்கும் தென் தமிழ்ச் சங்கம் பல்லாண்டு வாழ்வதாக.

வித்துவான், கோ. முருகையா, கவுந்தப்பாடி.

அழைப்பிதழ் பெற்றுப் பெருமகிழ்ச்சி யடைந்தேன். சிறந்த முறையில் மாநாடுகள் நடத்தி எட்டுத்தொகை நூல்களுள் பலவற்றைத் தமிழ்மக்கள் பலரும் நன்குணர்ந்து அவற்றைப் படித்துப் பயன் எய்துமாறு செய்த பெருமை தங்கட்கே உரியது. அத்தகைய சீரிய முறையில் பத்துப்பாட்டையும் எல்லோரும் அறிந்து படித்துப் பெரும்பயன் அடையுமாறு தாங்கள் மேற்கொண்ட அரிய முயற்சி போற்றத்தக்கதாகும். சிறந்த தமிழ்ப் பேராசிரியர் தலைமையில் நடைபெறும் பத்துப்பாட்டு மாநாடு இனிது நிறைவேறுமாறு எல்லாம் வல்ல இறைவன் திருவடிகளை வணங்குகிறேன்.

T. V. சதாசிவபண்டாரத்தார், அண்ணமலைநகர்.

முன்பு சென்னையில் அகம், புறம், குறுந்தொகை முதலிய மாநாடுகளைக் கூட்டி அருமையான கட்டுரைத் தொகுதிகளை வெளியிட்டதுபோல், தற்போதும் நெல்லையில் பத்துப்பாட்டு மாநாடு கூட்டி அரிய உரைகளை வெளியிட முற்பட்டது, தமிழ் மொழிசெய்த தவமே ஆகும். ஆராய்ச்சியில் வல்ல பெரும் புலவர்களை வைத்து அவர்கள் பேருரைகளால் மாநாட்டைச் சிறப்பிக்கச்செய்வது போற்றத்ததக்கது.

C. M. இராமச்சந்திரன் செட்டியார், கோவை.

கலைமுனைவர் (டாக்டர்) மு வரதராசனார் தலைமையில் நெல்லையில் தென்றலும் தென்னாட்டுப் பண்பும் பிறந்ததாகக் குறிக்கப்படும் தண்டமிழ்ப் பொதிகை நீழலில் நடைபெறும் பத்துப்பாட்டு மாநாடு, உலக இலக்கியத்தில் பத்துப்பாட்டுக்கும் தன்னேரிலாத் தமிழ்ச் சங்க இலக்கியத்துக்கும் தமிழர் உலகப்பொது மறைக்கும் உரிய தனிச்சிறப்பிடம் விளக்கி, இடைக்காலப் போலிப்பண்பாம் அரைஇருளில் அல்லாடிவரும் கீழ்த்திசை யுலகுக்கும் அதன் உள்ளொளி காணாது மயங்கி மல்லாடிவரும் உலகுக்கும் மலையந்தரும் மலைவிலாத் தலையூற்றொளி காட்டுமாக.

கா. அப்பாத்துரை, எம். ஏ., எல். டி., சென்னை.

எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் ஈடு எடுப்பற்றவை. பத்துப்பாட்டுள் ஒவ்வொன்றும் தமிழுக்கே உரிய ஆசிரியத்தில் அமைந்துள்ளது. நூற்றுக்கு ஓரிரண்டு விழுக்காடு வடசொற்களே இந்நூற்கண் உள. பாட்டின் ஒவ்வோரடியும் அமிழ்தத் துண்டம் என்றியம்பத்தக்கவாறு இனித்ததோர் இறுகிய நடையால் இயன்றுள்ளது

வித்துவான், இரா. பெ. இராமச்சந்திரன், கிருட்டிணகிரி.

பத்துப்பாட்டு - பழம் பெரும்பனுவல் பத்து நூல்களின் தொகுப்பு. படிக்கப் படிக்கப் பரிமளம் கமழ்வது. பண்டைக் காலப் பழக்க வழக்க நாகரிகங்களை, ஒழுக்கத்தை, இல்லறவன் பின் மாண்பினை, செவ்வனே எடுத்துக்காட்டும் சீரிய நூல்.

வித்துவான், P. K நரசிம்மன், சேலம்.

இறைவன் அருள்கொண்டு இனிதாக நடக்கும் மாநாட்டிற்கு, தாங்கள் எடுத்துக்கொண்ட முயற்சிக்கு இவ்வுலகம் தங்களுக்கு நன்றியுடைத்து.

பா. லெக்ஷ்மணன் செட்டியார், திருக்குற்றாலம்.

குமரி மூலையில் நடக்கும் நமது மாநாடு வெற்றிப்பந்தாய்—வேங்கடத்துக்குக் கால்கோளாய்—தமிழ்நாட்டில் ஒலிக்கின்றது. வாழ்க மாநாடு; வாழ்க தமிழர்; வருக தமிழ்மொழி அரசு; தமிழ் மொழி ஆட்சி.

வித்துவான், R. ஏகாம்பரநாதன் M. I. H., தஞ்சை.

டாக்டர் மு. வரதராசனார் தலைமையில் நிகழும் இம்மாநாடு வெற்றிபெற நடைபெறும் என்பதில் ஐயமில்லை. இம்மாநாடு இனிது நிறைவேறுமாறு தமிழன்னை அருளுக.

T. P. சந்தானகிருஷ்ண நாயுடு, தலைவர், ஆசிரியப் பயிற்சிக் கல்லூரி, சென்னை.

அடியேன் அம் மாநாட்டிற்கு வந்து பல்லருஞ் சொற்பொழிவுகளைக் கேட்டு, இன்புற்றுப் பயனடையவேண்டுமென்ற விருப்பு மிகக் கொண்டுளேன். எனினும் தொலைவான வழிப் பயணம் செய்யவேண்டியிருப்பதையும், என் உடல்நிலை தற்போது சற்று நலமில்லாதிருப்பதையும் எண்ணித் திகைத்து விடுத்தேன். என்றாலும், நம் தமிழ்த்தாய் தோன்றாத் துணையாய் உங்கள் யாவருடனுமிருந்து அவ்விழாவை மிகச் சிறப்பாய் நடத்தியருள வேண்டுகிறேன்.

ஆ. அ. வரகுணபாண்டியன், தஞ்சை.

பொருநரின் வாள்வீச்சும், பாணரின் பண்ணும், முல்லை மணமும், காதலின்பமும், பல்வளப் பொருளினிமையும் கலந்து மிளிரும் மாநாட்டில் என் வாழ்த்தையும் ஒட்டிக்கொள்ளவும். வாழ்க பத்துப்பாட்டு மாநாட்டு நிகழ்ச்சிகள். ஒவ்வொரு பாட்டையும் தனிச் சிறு நூலாக எளிய நடை கொண்ட விளக்கங்களுடன் மக்கள் மன்றத்தில் உலவுமாறு வகை செய்யுங்கள். புலவரன்றிப் பொதுவோரும் அறியட்டும். என் அன்பு வாழ்த்தும் வணக்கமும் மாநாட்டுப் பங்காளர் யாவர்க்கும் உரியதாகுக.

புலவர், கோவை, இளஞ்சேரன், புதுக்கோட்டை.

அறிஞர்கள் பலரைக்கூட்டி இந்த நற்றமிழ்த் தொண்டைச் செய்ய முன்வந்த தங்கள் முயற்சி நன்முயற்சியாகுக. தங்களைப் போன்ற நற்றமிழ்த் தொண்டர்களைப் பெற்ற தமிழ்த்தாய் எத் திசையும் புகழ் மணக்க இருந்த பெருந்தமிழ்த்தாய் ஆவாளாக.

வித்துவான், மா. குருசாமி, இராமநாதபுரம்.

தமிழ் மொழிக்கும் சமயத்துறைக்கும் நீவிர் ஆற்றிவரும் தொண்டு மிகமிகப் பாராட்டற்குரியது. தென்னிந்திய தமிழ்ச் சங்கச் சார்பில் நடக்கும் இப் பத்துப்பாட்டு மாநாடு, யான் வழி படும் அம்மை அப்பனது திருவருள் துணையால் இனிது நடந் தேறுவதாக.

வித்துவான், பாலூர், D. கண்ணப்ப முதலியார், சென்னை.

தமிழரசு தமிழ்நாட்டில் அமையவேண்டும் என்று அவாவி நிற்கும் தமிழ் மக்கள் தேமதுரத் தமிழோசையை' உலகமெலாம் பரப்புவதற்கு இம்மாதிரியான இலக்கிய மாநாடுகளே துணை செய்யும்; வெறும் அரசியல் மாநாடுகள் மக்கள் உள்ளத்தைப் பண்படுத்தத் துணைசெய்யா; அதிகாரத்தை மட்டிலும் கொண்டு ஒன்றும் செய்யமுடியாது. ஆளுவோரும் ஆளப்படுவோரும் உயர்ந்த பண்பாட்டில் வாழவேண்டுமென்ற நல்லெண்ணங் கொண்டால்தான் நாடு நன்மையுறும். நாட்டு மக்களும் வையத் துள் வாழ்வாங்கு வாழமுடியும்.

மாநாடு சிறப்புற நடைபெறவேண்டும் என்று பத்துப் பாட்டின் முதற் பாட்டுடைத் தலைவனாகிய முருகவேளை இறைஞ்சு கின்றேன். வாழ்க பத்துப்பாட்டு மாநாடு!

வித்துவான், N. சுப்பு ரெட்டியார், அழகப்பா கல்லூரி, காரைக்குடி.

காலத்திற் கேற்பத் தமிழ்வளஞ் சிறந்தோங்கும் இக்காலத் தில் பத்துப்பாட்டு மாநாட்டினை நடத்தி அம் மாநாட்டில் அந் நூலிலுள்ள அரும்பெருங் கருத்துக்களையெல்லாம் எல்லா மக்களும் அறியும்வண்ணம் அறிஞர்களைக்கொண்டு சொற்பொழி வாற்றியும், எழுத்துவடிவில் நூலாக வெளியிட்டும், சிறந்த தமிழ்த்தொண்டு புரியும் தங்களுக்கு என் உளமார்ந்த மகிழ்ச்சி யையும் நன்றியறிதலையும் தெரிவித்துக்கொள்கின்றேன்.

வித்துவான், மீ. பொன். இராமநாதன் செட்டியார், சென்னை.

நம் நாடு பண்டைத் தமிழகம்போல் மிளிரவேண்டும் என்ற குறிக்கோளுடன் தாங்கள் ஆற்றிவரும் பணி பாராட்டற் குரியது.

புலவர், வீ. இளங்கண்ணனூர், பொன்மலை.

பத்துப்பாட்டு மாநாட்டின் அழைப்பிதழ் வரப்பெற்றேன். உள்ளத்தில் உவகை நிறைந்தேன். 'பத்துப்பாட்டுச் சொற்பொழிவுகள்', 'பத்துப்பாட்டு மலர்' என்னும் நூல்களின் வெளியீட்டினையும் அறிந்து மேலும் மகிழ்ந்தேன்.

புலவர், வே. ஐயா நாயக்கர், ஆரணி.

நம் தமிழ்நாட்டில் சங்கவிலக்கியங்களிற் காணப்படும் சீரிய கருத்துக்கள் மக்களிடையே மாண்புடன் பரவ வேண்டுமானால் பத்துப்பாட்டு மாநாடுபோன்ற பல மாநாடுகள் நடக்கவேண்டு மென்பது எனது ஆவல். சென்னைப் பச்சையப்பன் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் மு. வரதராசனார் அவர்கள் மாநாட்டுத் தலைவராக இருப்பது மிகவும் மகிழ்ச்சிக்குரிய செயலாகும்.

வித்துவான், மா. சுப்பிரமணியன், கண்டனூர்.

தமிழின் தனிச்சிறப்பை, ஆற்றலை, பண்பாட்டை உணராத தமிழ்மக்கள் ஒவ்வொருவரும் நன்கு உணரச் செய்வதோடு, நாட்டிலே பலரும் உணர, செய்துவரும் உங்கள் உழைப்பு "உயர் மதியின் உறைவிடம்போல்" உறுபுகழால் ஒளிபெறட்டும் என வாழ்த்துகிறேன், இறையை வேண்டுகிறேன்.

வித்துவான், சிவ. வேலாயுதன், களக்காடு.

தங்கள் அன்புமிக்க அழைப்புக் கிடைக்க மகிழ்ச்சி. தமிழ் மறுமலர்ச்சிக்குத் தங்கள் கழகம் செய்துவரும் சேவை பாராட்டுதற் குரியது. மாநாடு சிறப்பாக நடைபெற்று அனைவருக்கும் பயன்படுமாக. அனைவருக்கும் அன்பு.

தி. சு. அவினாசிலிங்கம் செட்டியார், எம். பி. கோவை.

நலமிருபாலும். 9, 10-2-52 தேதிகளில் நெல்லையில் தாங்கள் பத்துப்பாட்டு மாநாடு நடத்த ஏற்பாடு செய்திருப்பதை இன்று பிற்பகல் கிடைத்த அழைப்பின் வாயிலாக அறிந்தேன். சிறந்த தமிழ்ப்புலவர்கள் பதின்மரும், அவர்கள் மதிப்பிற்குரிய தலைவரொருவரும் மாநாட்டிற் கலந்துகொள்ள இசைந்திருப்பது கண்டு, மிக்க மகிழ்ச்சி யடைகின்றேன்.

சில ஆண்டுகட்கு முன்பு இத்தகைய இலக்கிய மாநாடுகளைச் சென்னையில் திறம்பட நடத்தி புலவர்கள்தம் திறமைமிக்க பேச்சுக்கள் யாவும் நூல்வடிவில் வெளிவரத் தாங்கள் வழிகாட்டிய பெருந்திறமையை இன்று நினைவுகூர்ந்து இன்புறுகின்றேன்.

ச. சச்சிதானந்தம் பிள்ளை, சென்னை.

தெய்வீகத் தமிழ்மணங் கமழும் பத்துப்பாட்டு என்ற சங்க நூலைத் தங்கள் சங்கம் இப்பொழுது புலவர் பெருமக்களின் உறுதுணைகொண்டு அவைகளின் அரும்பெரும் கருத்துக்களைச் சொற்பொழிவுகளாக்கி, நூல்வடிவில் வெளியிடுகின்ற தன்மை யானது, தமிழ் மொழி தலைசிறந்து தழைத்தருளத் தங்களால் இயன்றனவெல்லாம் செய்துவருகின்றீர்கள் என்பதையன்றோ காட்டுகின்றது.

**வித்துவான், பொ. தில்லைக் கோவிந்தன், நாகூர்.**

பன்னியுரைக்குங்காற் பாரதமாம்; பல சொல்லியென்? அகப்பொருளைப் பற்றியனவும் புறப்பொருளைப் பற்றியனவு மான தமிழரின் பண்பாடுகளை யெல்லாம், தூயதமிழில், ஆடியிற் காண்பதுபோல் இவற்றிற் காணலாம். இத்தகைய நூலைப்பற்றிக் கழகத்துச் சொற்பொழிவுகள் நிகழ்த்துகின்ற முயற்சி கடவு ளருளால் இனிது நிறைவுறுக. பத்துப்பாட்டு வாழ்க.

**வை. மு. கோபாலகிருட்டிணமாச்சாரியார், சென்னை.**

"பத்துப்பாட்டின்" பெயரால் இன்று மாநாடு நடைபெறு வது, மகிழ்தற்குரியது என்பதோடு நாட்டிலே நிலவும் மொழி யுணர்ச்சிக்கும் எழுச்சிக்கும் ஓர் எடுத்துக்காட்டு. தமிழன்னை யின் நல்வாழ்வு குறித்த தங்கள் போன்றாரின் இச்சீரிய செயல் பாராட்டற்குரியது. மாநாடு, சீரும் சிறப்பும் பெற்று, வீறு கொண்ட தமிழரின் வெற்றித்திருநாளாக—புத்துலக வாழ்க்கை யின் பொன்னுளாக மிளிரவேண்டும் என்ற எனது ஆசையை யும், வாழ்த்தையும் பணிவன்போடு தெரிவித்துக்கொள்கின் றேன். வாழ்க அத்திருநாள்.

**வித்துவான், மா. அய்யாவு, மண்ணச்ச நல்லூர்.**

பத்துப் பாட்டின் பொருளும் பயனும்
எத்திறத் தாருங் கொள்ளும் வகையான்
தக்கார் தலைமையில் வாக்கிற் பெரியார்
முக்கால் கூடி ஆக்கஞ் செப்ப
நெல்லை யருண கிரியிசை மன்றத்தின்
தமிழ்த்திரு விழாவினோர் பாகமா யாக்கிய
மாநா டிஃது வாழிய நன்று
அமிழ்தம் வேண்டிவந் தீண்டிய மக்களும்
புகழ்பெற் றோங்கிடும்ஆறுபெற் றய்ந்திடின்
சைவசித் தாந்தமெய்க் கழகம்
நோக்கம் நிறைவேறி யின்புறு மன்றே.

**கா. நவநீதன், டோணவூர்.**

தமிழ்க் கருவூலமாகிய பத்துப்பாட்டினைப் பாரறியச்செய்யும் நன்முயற்சி கண்டு மகிழ்கின்றேன். சிறந்த தலைவரின் தலைமையில் நடைபெறும் இம் மாநாடு செவ்விதின் முடிய எல்லாம் வல்ல இறைவனை வழுத்துகின்றேன். என்றும் உள செந்தமிழ்த்தாய், உள்ளமும் உடலும் பூரிக்கும் இந்தத் தொண்டு தமிழ் வரலாற்றின் ஒரு மறுமலர்ச்சி ஆம். இம் முயற்சி வெல்க.

**வித்துவான், K. T. நீலகண்டன், செங்கம்.**

பத்துப்பாட்டு—இயற்கை எழில் திகழும் தீஞ்சுவைத் தமிழ் நூல். வடசொற் கலப்பற்ற தமிழ்க் கருவூலம். பண்டைக்கால அரசியல், பொருளியல், சமயம், வரலாறு, நாகரிகம், கொடை, மக்கள் வாழ்க்கைத்திறன் முதலியவைகளைக் காட்டும் காலக் கண்ணுடி. உவமைகள் உவகை ஊட்டும் திறத்தன. பத்துப் பாட்டென்னும் பைந்தமிழ் நீரூற்றில் திளைத்துக் குளித்து இன்னீர் பருகத் தாங்கள் கூட்டும் மாநாடு செம்மைசால் முறையில் நடைபெற செந்தமிழன்னையை வணங்குகிறேன்.

**வித்துவான், தெ. சண்முகவேல், தென்காசி.**

மாநாடு சிறப்பாக நடைபெறவேண்டுமென, தில்லைப்பெருமான் திருவருளை வேண்டுகின்றேன். தலைவர், திறப்பாளர், சொற்பொழிவாற்றும் அறிஞர்கள் எல்லோர்க்கும் எனதுளம் நிறைந்த வணக்கமும், நன்றியும் உரிமையாக்குகின்றேன்.

**N. S. AR. அருணாசலன் செட்டியார், சென்னை.**

கேட்போர், கிளப்போர் தமிழகப் பண்டைப் பெருமைகளை உளத்திற்கொண்டு ; தமிழுக்காக, தமிழர் வாழ்வுக்காக உழைக்கவும்; தமிழன், அனைத்துச் செயல்களிலும், ஒழுக்க மேம்பாட்டிலும் தலைசிறந்தவன் என்பதைத் தரணிக்குக் காட்டவும் பத்துப்பாட்டு மாநாடு உதவுவதாக.

**வித்துவான், வேத. தாவீது, தூத்துக்குடி.**

தக்கார் தலைமையில் நடைபெறும் மாநாடு நெல்லையப்பர் அருளால் சிறப்பாக நடைபெற வேண்டுறேன்.

**வித்துவான், R. பஞ்சநதம் பிள்ளை, திருச்சி.**

தக்கார் தலைமையில் புலமைமிக்கார் சொற்பொழிவுகளுடன் நிகழும் இம்மாநாடு சிறப்புறநிகழ செந்தமிழ்த்தாயின் திருவருளை வேண்டுகின்றேன்.

**வித்துவான், கோ. இளையபெருமாள், ஆரணி.**

[ஆசிரிய விருத்தம்]

" கல்லாருங் கனிந்துருகும் படியினிக்கும்
தமிழ்நூல்கள் கணக்கற் றோங்கி
யெல்லாரும் பகலவன்போ லினிதொளிர
வியற்றிவரும் பண்பன் மிக்க
நல்லோர்கள் புகழறிஞன் சுப்பைய
நற்பெயரோன் நானி லத்தே
பல்லோரும் பயனுறப்பத் துப்பாட்டைப்
பரப்பிவள முறச்செய் தானல்

(குறள் வெண்பா)

சூரியன்போல் ஓங்கிடுக சுப்பைய நற்குணத்தோன்
தேரித் தமிழ்வாழ்வித் தே.

பண்டித, இரா. திம்மப்ப அந்தணனர், தாராபுரம்.

எட்டுத்தொகையில் பல தொகை நூல்களுக்கு மாநாடுகள் கூட்டப்பட்டன. அம்மாதிரியே பத்துப்பாட்டுக்கும் நடைபெற வேண்டும் என்று அன்று கருதினேன். அஃது இன்று நடைமுறைக்கு வந்தது குறித்து மகிழ்கின்றேன். மாநாடு செவ்வனே நடைபெற இறைவனை வேண்டுகின்றேன்.

துடிசைகிழார். அ. சிதம்பரனர், கோவை.

பண்டைத் தமிழ் மக்களது நாகரிகத்தையும், சிறந்த பண்பாடுகளையும், பிற ஒழுகலாறுகளையும் அங்கையிற் கனியெனக் காட்டுவன—பத்துப்பாட்டு முதலாகவுள்ள சங்கத் தொகை நூல்களே யாகும். சங்க நூல்களைக் குறிப்பதற்காக வழங்கும் சொற்றொடரில் இது பெற்றுள்ள முதன்மையான இடத்தைக் கொண்டே பத்துப்பாட்டின் சிறப்பியல்பு பெறப்படும். நெல்லையில் நடைபெறும் பத்துப்பாட்டு மாநாடு, தக்க அறிஞர்களைக் கொண்டு எஞ்சிய எட்டுப் பாட்டுக்களுக்கும் சீரிய உரை எழுதுவித்து வெளியிடுவதற்கான முயற்சியில் முனையுமானல், அதுவே அம்மாநாடு தமிழுலகிற்குச் செய்யும் பேருதவியாகும்.

மாநாடு சிறப்பாக நடந்தேறி இனிது முடிவதாக.

வல்லை. பாலசுப்பிரமணியம், சென்னை.

பத்துப்பாட்டு மாநாட்டுக்கு அழைப்பு அனுப்பியதைக் குறித்து மகிழ்ச்சியடைகின்றேன். மாநாடு வெற்றியடைவதாக.

தி. கா. அறம்வளர்த்தநாதன், திருச்செந்தூர்.

பத்துப்பாட்டு தமிழ்மக்கள் அனைவராலும் படித்தற்குரியது. இத்தகைய நூல் சாதாரண மக்களும் படித்தற்குரிய வகையில் கட்டுரைகள் உருவத்தில் மாநாடு வெளியிடுதல் பாராட்டற்பாலது. இம் முயற்சிக்குத் தமிழகம் நன்றிசெலுத்தும் கடப்பாடுடையது.

டாக்டர், மா. இராசமாணிக்கனூர், சென்னை.

அழைப்பிதழ் வரப்பெற்றேன். மனம் மிக மகிழ்வுற்றேன். உண்மையில் இப்போதுதான் நம் நாட்டில் தமிழ்மணம் கமழ்ந்து வீசுகின்றது. தமிழன்னை அரியாசனத்து அமர்ந்து ஆட்சி புரிந்த அந்நாள் என் நினைவுக்கு வருகின்றது. அந்நாள் சங்க இலக்கியங்களை நாம் பொன்னேபோல் போற்றக் கடமைப்பட்டுள்ளோம். அவ் விலக்கியங்களுள் சிறந்ததெனக் கருதப்படுவதான பத்துப்பாட்டைப் புகழாதார் யாவர். அப் பத்துப்பாட்டுக்கு மாநாடு கொண்டாடுவது சிறப்புடைத்தே. அஃதும் செந்தமிழ் சிறந்து மிளிரும் திருநெல்வேலியில் கொண்டாடப்படுவது சீருடைத்தே! கன்னித் தமிழின் இனிமையையும் செம்மையையும் விளக்கித் தமிழ்நாட்டுக்குப் பெருந்தொண்டு புரிந்து கல்விக்கடல் எனச் சொல்லத்தக்க முறையில் விளங்கி வருபவரும் தமிழ் வளம்பெருகப் பெரிதும் உழைத்து வருபவருமான டாக்டர் மு. வரதராசனுர் மாநாட்டுக்குத் தலைமை தாங்குதல் தகைமையுடைத்து. பேச்சாளர் பட்டியைக் கண்டேன். மாநாடு கலைக்கூடமாகச் சிறக்கும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. இத்தகைய மாநாட்டை நடத்தும் பொறுப்பைத் தாங்கள் எடுத்துக்கொண்டது மகிழ்ச்சிக்குரிய செயலாகும். இதைத் திறப்பவராக அமைந்தவர் சித்தாந்தக்கடல். அக்கடலின்கண் மாநாட்டு மக்கள் திளைப்பார்களாக.

V. செந்தில்வேலாயுத நாடார், ஆணையர், காஞ்சிபுரம்.

தண்டமிழர் வாழ்க்கைநிலையைத் திரைப்படம்போல் தெளியக்காட்டுந் தீந்தமிழ் நூற்கள் சங்க இலக்கியங்களாகும், அவற்றுள்ளுந் தலைசிறந்தன பத்துப்பாட்டெனப் பகருப.

காலத்திற்கேற்ற தேவையை வெளிநாட்டிலிருந்து பெற்று வந்திருக்கின்றோம் என்பதைப் பத்துப்பாட்டு நன்கு காட்டுகின்றது. இவ்விழிநிலையகல நம்போன்றோர் கடமை யாது என்பதையும் காட்டுகின்றது. "தாயில்தூவாக் குழவிபோல" ஆகாது நாட்டை நலம்பெறக் காக்க வழிகாட்டும் நற்பெரு மாநாடு இனிதே நடைபெற இறைவ னருள்புரிவானாக.

புலவர், நா. நல்லொளியன், பேரளம்.

பத்துப்பாட்டு, பல இதழ்களையுடைய ஒருபெரும் நறுமலர். அஃது ஒரு வாடாமலர். புலவர் கூடிப் பொருட்டகவினைப் புணர் கூட்டுண்ணும் செயலில் பிறக்கும் இன்பத்திற்கு ஈடுமுண்டோ? பத்துப்பாட்டுப் பற்றி மாநாடு கூட்ட முதற்கண் நினைத்தார் நம் வாழ்த்திற்குரியர். அவர் நீடு வாழ்க. அம் மாநாட்டில் தொடர் புடையார் பலரும் நீடுவாழ்க.

**தி. சு. கந்தசாமி முதலியார் எம். ஏ., சாத்தூர்.**

பண்டைத் தமிழரின் பண்புறு நலத்தினைப் பாவலர் பலரும் பத்துப் பாட்டினின்று பகர்வதைக் கேட்போர் பெறும்பேறு பேறேயாம். தமிழ் இளஞாயிறு மு. வ. அவர்கள் தலைமையில் மாநாடு முதன்மையாக நடைபெற்று முடியும் என்னுந் துணி புடையேன்.

**வித்துவான், சோ. மாணிக்கம், கும்பகோணம்.**

தித்திக்குந் தமிழ் அமுதான பத்துப்பாட்டின் சுவையினை வித்தகப்புலவோர் பலர் முத்தமிழ் அறிஞர் டாக்டர் மு. வ. அவர்கள் தலைமையில் வழங்கும் செய்தி என் மனத்தைக் கவர் கிறது. மாநாடு சிறப்பாக நடைபெற்றுத் தமிழ் முழக்கம் செய்ய வேண்டுமென்று வாழ்த்துகிறேன்.

**புத்தனேரி, ரா. சுப்பிரமணியன், சென்னை.**

இம் மாநாட்டிற்கு என் அரிய நண்பர் டாக்டர், மு. வரத ராசனுர் அவர்கள் தலைமை தாங்குதல் சாலவும் பொருத்த முடைத்தாகும். இம் மாநாட்டிற்குச் சிறந்த திறப்பாளரும் அரிய சொற்பொழிவாளர்களும் அமைந்தது பாராட்டற்குரிய தாகும். தங்கள் அஃகாமுயற்சி வெற்றி பெறுவதாக.

**பூ. ஆலாலசுந்தரன் செட்டியார், எம். ஏ., கிறித்தவக்கல்லூரி, தாம்பரம்.**

அழைப்புக் கடிதம் கிடைத்தது; மாநாடு வெற்றி பெறுவ தாக! பலவகையிலும் பண்டைத் தமிழ்க் கவிதையின் நயத்தை உலகம் அறியுமாறு முயலுவது தமிழராகிய நம் அனைவருடைய் கடமையாகும்.

**வழக்கறிஞர், பெ. நா. அப்புசாமி, சென்னை.**

**தந்தி:**

மாநாடு சிறந்த வெற்றியுடன் நடைபெற இறைவனை வேண்டிக் கொள்கிறேன்.

**மு. காசிவிசுவநாதன் செட்டியார், பாகனேரி.**

# வரவேற்பு இதழ்

[திரு. சி. கிருஷ்ணன், வீரவநல்லூர்.]

( நிலைமண்டில ஆசிரியப்பா )

திருவொடு கலைகளும் திகழ்ந்து தோன்றும்
பண்டைச் சிறப்புடைப் பாரதத் தாயின்
முகமெனத் திகழும் தமிழ்நா டதனில்
திலகம்போல் திகழும் திருநெல் வேலியில்
மணமெனத் திகழும் மாண்பையும் பெற்ற
அமிழ்தினு மினிய தமிழ்மொழி நூல்களை
விருப்புட னுகவே வெளியிடு கின்ற
சைவசித் தாந்தநூற் பதிப்புக் கழகத்தின்
ஆதர வாலே அணியுடன் நடைபெறும்
பத்துப் பாட்டு மாநா டதற்குத்
தலைமை பூண்ட தகைசா லண்ணலே!
சென்னைமா நகரில் சீருடன் விளங்கும்
பச்சை யப்பன் கல்லூரி யதனில்
மாணவர் களுக்கு மாண்புடைத் தான
அமிழ்தினு மினிய தமிழ்மொழி யதனைப்
பீடுடன் புகட்டும் பெரியோய்! வருக!
வரத ராசப் பெயரீர்! வருக!
நல்வர வாகுக! நல்வர வாகுக!
பத்துப் பாடலின் பண்புக ளனைத்தையும்
பாங்குட னுகவே பரப்பு வதற்கு
இன்ப முடனே இவண்வந் தடைந்த
செந்தமிழ்ப் புலவீர்! வருக! வருக!
பண்டைத் தமிழரின் பற்பல வியல்பைப்
பாங்குடன் உரைக்கும் பத்துப் பாடலின்
சிறப்பை அன்புடன் செவிக்கொள வந்த
செந்தமிழ் மாந்தரே! வருக! வருக!
காந்திமதி அம்மாள் தன்னுடன் கூடிய
நெல்லை யப்பரின் நல்லரு ளதனைப்
பெற்றுமே நீவிரும் பூவுல கதனில்
நீடு வாழிய! வாழ்க! வாழியவே!

# செய்திகளும் குறிப்புக்களும்

**நாட்டு மொழியிற் கற்பிப்பதே நன்று :**

மக்கள் தலைவரரம் இராசேந்திரப்பிரசாது அவர்கள் குசராத்து வித்தியாபீடப் பட்டமளிப்பில், கற்பிக்கும் மொழி தாய் மொழியாகவே இருத்தல் வேண்டும். வேற்றுமொழியில் போதிப்பது மாணுக்கர்களைத் துன்புறுத்துவதாகும் என்றனர்.

**பிரிவு**

திரு. M. V. சுப்புராயலு நாயுடு அவர்கள் நெடு நாட்களாக நம் கழக மேலாளராக இருந்து பணியாற்றியவர்கள். நற்பண்பு வாய்ந்தவர்கள். துணை அலுவலாளரோடு நெருங்கிய இணக்கமும் தொடர்புமுடையவர், திருமுருகன் பற்று மிக்கவர். சிலவாண்டுகளாக நோயுற்று நலிந்துளாராயினும் உரமும் உறுதியும் உடையவரா யிருந்தனர். 15-2-1952 வெள்ளிக்கிழமை மாலை 6 மணிக்கு ஆண்டவன் அடியிணையை அடைந்தனர். அவர்கள் ஆவி அடியிணைக்கீழ் இன்புறுமாக. அவர்கள் பிரிவுக்குப் பெரிதும் வருந்துகின்றோம். அவர்கட்கு மனைவியாரும் ஆண்மக்கள் மூவரும் உளர். அவர்கட்கு எங்கள் கையறுநிலைப்பரிவு உரித்தாகுக.

## மதிப்புரை

**புலமை நூல்**

[ஆசிரியர், கோயமுத்தூர், விளாங்குறிச்சி திரு. வி. நா. மருதாசலக் கவுண்டர் அவர்கள். விலை ரூ. 2 8 0]

இந்நூல் அதன் பெயருக்கேற்பப் புலவர்களைப்பற்றியும், புலவர்களால் பாடப்பெறும் பொருள்களைப்பற்றியும், புலவர்களின் வகைமை நெறி முறைகளைப்பற்றியும், பாட்டு உரை நடை முதலிய பண்புகளைப் பற்றியும், மெய்யுணர்வு, கடவுட்கொள்கை, திருவருள் வலத்தால் செய்து காட்டிய செயற்கருஞ் செய்கை, புலவரை இகழ்ந்த புல்லோர் புலம்பு, புலவரைப் போற்றிய சீரியோர் சிறப்பு, ஆண்டவன் அருளிப்பாட்டால் பாடியருளிய நாயன்மார், ஆழ்வாராதியோர் அருட்செல்வம் முதலிய பலவற்றைப்பற்றியும் தெள்ளிதில் விளக்குகின்றது.

நூலியற்றுமுறை, உரையியற்றுமுறை, முற்காலப் பிற்கால நூல் உரையாசிரியர்களின் நுட்பதிட்பம், அறிவியல்நூல் மொழிபெயர்க்க வேண்டிய இன்றியமையாமை, அப்பெயர்ப்புக்கு அமைக்குஞ் சொற்கள் தூய தமிழ்ச் சொற்களாக இருக்க வேண்டுவதன் கட்டாயம், செவி வழக்காக நின்று நிலவும் பல தமிழக வரலாறுகள் முதலியவைகளும் செம்மையாக ஆசிரியரவர்களால் யாக்கப் பெற்றுள்ளன.

பொதுவாக நூல் புலமை யுணர்வார்க்கு இலக்கணமாகவும் புலவர், புரவலர், நாடு, மொழி, நன்னெறி, யுணர்வார்க்கு இலக்கியமாகவும் திகழ்கின்றது. எளிய இனிய தூய தமிழ்நடை. நல்ல பதிப்பு. மாணவர்கட்கும் ஆசிரியர்கட்கும் வைப்பனைய மாண்புமிகு நூலெனலாம். செந்தமிழன்பர்கள் ஆதரவு பெருகுமாக.

---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகத்திற்காக, சென்னை 2/140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில் திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா



பாகனேரித் தமிழ்ப்புரவலர்
வே. பெரி. பழ. மு. காசிவிசுவநாதன் செட்டியார்